ஆசையேதிசைபொன்னன்பாமாகுலம்வருத்தமோசை
காசையேகாயாநாணல்காமர்தானழகுகாதல்
பாசமேகயிறுகூளிபகருநித்தூணயன்பாகும்
நூசென்பதாடையானைப்புரசைதூசிப்படைப்பேர். (எ)

தாசியேபரணிகுதிரைதளிமென்பதளியேகோயில்
வேசிகழுதையேகோவேறுவேசரியுமாகும்
ஆசுகம்பகழிகாற்றுமந்தரியுமையேதுர்க்கை
கோசிகஞ்சாமவேதங்கூறுபட்டாடைக்கும்பேர். (அ)

பசவேறுசிவனுவாம்பாரதிவாணிதோணி
வசவேயான்கன்றும்பொன்னும்வசுக்களுந்தீயுநாற்பேர்
அசமூவாண்டுறுநெல்லாடாமணையென்பகரையேமெத்தை
சசியென்பகர்ப்பூரஞ்சந்திரனயிராணிமுப்பேர். (௯)

விசும்புபொன்னுலகுமேகம்விண்ணெனுதிசையுநாற்பேர்
தசம்புநற்குடமிடாவாஞ்சாத்தனேயருகனையன்
இசைபுகழ்கிளவிபாட்டாமேங்கலேயொலியிரங்கல்
பிசுனனேகோளன்பொய்யனுலோபனும்பேசுமுப்பேர். (௧0)

வச்சிரஞ்சதுரக்கள்ளிவைரமேகுலிசமுப்பேர்
நொச்சியேசிந்துவாரமதில்சிற்றூர்நுவலலாமே
தச்சனேசித்திரைப்பேர்தபதியன்றுனுமாகும்
உச்சிநண்பகலுச்சிப்பேருறுப்பவயவமுடம்பாம். (௧௧)

பாசென்பபசுமைமூங்கில்பப்பென்பபாரப்போடொப்பாம்
மாசென்பசிறுமைகுற்றமழைமுகிலழுக்கொடெற்பேரே
கேசம்பெண்மயிர்க்குமாண்பான்மயிருக்குங்கிளத்தலாகும்
வாசியேகுழன்முன்றுண்மைவாசியென்னேவனற்பேர். (௧௨)

மிசையென்பதுணவுமேமேமிசைச்சொல்லுமுப்பேர்
விசயமேவென்றிவெல்லம்வெங்கதிர்மண்டலப்பேர்
முசலியேயுடும்புதாழைமுந்தியவிராமனேந்தி
வசதிநல்விடமூர்வீடாம்வரனயன்பரமன்காந்தன். (௧௩)

சகரவெதுகை முற்றிற்று.

ஆ விருத்தம் - ௯அ.

---

ஆசையென்பது—திக்கு, பொன், விருப்பம். ௩.
ஆகுலம்—வருத்தம், ஒலி. ௨. காசை—காயாஞ்செடி, நாணற்புல்.
காமர்—அழகு, ஆசை. ௨. பாசம்-கயிறு, பேய், ஊசித்துளை, அன்பு.
தூசு—புடைவை, யானைப்பரசை, தூசிப்படை. ௩.

தாசி—பரணிநட்சத்திரம், அடியாள். ௨. தளி—துளி, கோயில். ௨.
வேசரி—கழுதை, கோவேறுகழுதை. ௨. ஆசுகம்—அம்பு, காற்று.
அந்தரி—பார்வதி, துர்க்கை. ௨.
கோசிகம்—சாமவேதம், பட்டுவஸ்திரம், புடைவை. ௩.

பசு—இடபம், உயிர், பசு. ௩. பாரதி—சரசுவதி, தோணி. ௨.
வசு—பசுவின்கன்று, பொன், அட்டவசுக்கள், நெருப்பு. ௪.
அசம்—மூன்றுவருடத்துநெல், ஆடு. ௨. அணை—கரை, மெத்தை.
சசி—கர்ப்பூரம், சந்திரன், இந்திராணி. ௩.

விசும்பு—தேவலோகம், மேகம், ஆகாயம், திசை. ௪.
தசும்பு—குடம், மிடா. ௨. சாத்தன்—அருகன், அரிகரபுத்திரன். ௨.
இசை—புகழ், சொல், பாட்டு. ௩. ஏங்கல்—சத்தம், அழுதல். ௨.
பிசுனன்—கோளன், பொய்யன், உலோபன். ௩.

வச்சிரம்—சதுரக்கள்ளி, வைரம், வச்சிராயுதம். ௩.
நொச்சி—நொச்சிச்செடி, மதில், சிற்றூர். ௩.
தச்சன்—சித்திரைநட்சத்திரம், தச்சன். ௨.
உச்சி—நடுப்பகல், உச்சந்தலை. ௨. உறுப்பு—அவயவம், சரீரம். ௨.

பாசு—பசுமை, மூங்கில். ௨. பப்பு—பரப்பு, ஒப்பு. ௩.
மாசு—அற்பம், குற்றம், மேகம், அழுக்கு. ௪.
கேசம்—கூந்தல், குடுமி. ௨.
வாசி—இசைக்குழல், அச்சுவினிநட்சத்திரம், குதிரை, வாசியென்
னேவல். ௪.

பிசை—உணவு, மேடு, மீமிசைச்சொல். ௩.
விசயம்—வெற்றி, வெல்லம், சூரியமண்டலம். ௩.
முசலி—உடும்பு, தாழை, பலதேவன், ஓந்தி. ௪.
வசதி—நல்லிடம், ஊர், வீடு. ௩. வரன்--பிரமன், சிவன், கணவன்.

# ஞகரவெதுகை.



துஞ்சலேல்கிலைபேருறக்குந்துயில்சோம்புசாவுமாகும்
பஞ்சரஞ்செருக்கிகூடாம்பரதரேகழியர்நாய்கர்
கஞ்சமேதாளங்குல்லைகமலம்வெண்கலம்வட்டப்பம்
குஞ்சமீயோட்டிநாழிகுறள்குன்றிகுறளைச்சொல்லே. (௧)

நெஞ்சென்பமனமார்பின்போகிழல்செல்வங்குளிர்ச்சிசாயை
மஞ்சுபூண்வலிவனப்புமழையானைமுதுகிவ்வைந்தே
வஞ்சிமேற்செலவோரூர்பாவல்லிமென்மருங்குற்பெண்ணும்
தஞ்சமேயெளிமையென்பதருபற்றுக்கோடுமாமே. (௨)

அஞ்சனங்கறுப்புமைதிக்கானையிலொன்றுமுப்பேர்
மஞ்சரியேபூங்கொத்துமாலைசெந்தளிருமாகும்
அஞ்சலிவணங்கல்வாவற்பறவையுமாகுமென்ப
இஞ்சியேபுரிசையிஞ்சியெறுமென்பவலிதண்டாமே. (௩)

கிஞ்சுகமுருக்குச்செம்மைகிருட்டிணன்றன்மால்பார்த்தன்
கஞ்சனமேகண்ணாடிகரிக்குருவிக்கும்பேரே
பஞ்சமேசிறுமையைந்தாம்பகழியம்பிதன்குதைப்பேர்
வஞ்சனைமாயைபொய்யாமாயன்மால்கருநிறத்தோன். (௪)

குஞ்சியாண்மயிர்புட்பார்ப்புக்குன்றியின்புதன்முப்பேரே
வஞ்சமேகபடம்வாளாமாயம்வஞ்சனைபொய்யென்ப
கஞ்சனேகுறளன்வேதன்களங்கந்தானழுக்குக்குற்றம்
கஞ்சிகைசிவிகையாடைகட்டிடுதிரையுமாமே. (௫)

ஞகரவெதுகை முற்றிற்று.

ஆக விருத்தம்-௪௫.

---

# டகரவெதுகை.



கடலைவஞ்சனைபொய்யென்பகடுங்கியநடக்கமுப்பேர்
மடல்பனையேடுபோல்வமலரிதழோர்நாற்கும்பேர்
படர்கடைநினைப்புநோவாம்பகர்ந்திடில்வீரர்க்கும்பேர்
குடகர்பகவோர்கூத்துக்கும்பமேகரும்பின்கட்டி. (௧)

மாடமேயுழுந்தோடில்லாமழையென்பகுளிர்ச்சிமேகம்
கூடமின்மறைவுகொல்லன்சம்மட்டிகுவட்டினுச்சி
சேடனூர்சாதிபாங்கன்செகந்தாங்குமனந்தனென்ப
கேடகம்பரிசைவேறோர்கேடிலூர்பலகைமுப்பேர்.

# ஞகரவெதுகை.

துஞ்சலென்பது—நிலைபெறுதல், நித்திரை, சோம்பல், சா. ௪.
பஞ்சரம்—செருந்திமரம், கூடு. ௨. பரதர்-நெய்தனிலமாக்கள், செட்டிகள். ௨.
கஞ்சம்—தாளம், கஞ்சா, தாமரை, வெண்கலம், அப்பம். ௫.
குஞ்சம்—ஈயோட்டி, நாழி, குறள், குன்றிக்கொடி, குறளைச்சொல்.

நெஞ்சு—மனம், மார்பு. ௨. நிழல்—செல்வம், குளிர்ச்சி, சாயை. ௩.
மஞ்சு—ஆபரணம், வலிமை, அழகு, மேகம், யானைமுதுகு. ௫.
வஞ்சி—பகைவர்மேற்செல்லுதல், ஓரூர், ஒருபா, ஒருகொடி, பெண்.
தஞ்சம்—எளிமை, பற்றுக்கோடு. ௨.

அஞ்சனம்—கறுப்பு, மை, மேற்றிசையானை. ௩.
மஞ்சரி—பூங்கொத்து, பூமாலை, தளிர். ௩.
அஞ்சலி—கும்பிடல், வாவற்பறவை. ௨.
இஞ்சி—மதில், இஞ்சி. ௨. எறுழ்—வலிமை, தண்டாயுதம். ௨.

கிஞ்சுகம்—முருக்கமரம், சிவப்பு. ௨. கிருட்டிணன்—கண்ணன், அருச்சுனன். ௨.
கஞ்சனம்—கண்ணாடி, கரிக்குருவி. ௨. பஞ்சம்—சிறுவிலைக்காலம், ஐந்து. ௨. பகழி—அம்பு, அம்புக்குதை. ௨. வஞ்சனை—மாயை, பொய். ௨. மாயன்—திருமால், கருநிறத்தோன். ௨.

குஞ்சி—ஆண்மயிர், பறவைக்குஞ்சு, குன்றிப்புதல். ௨.
வஞ்சம்—கபடம், வாள். ௨. மாயம்—வஞ்சனை, பொய். ௨.
கஞ்சன்—குறளன், பிரமன். ௨. களங்கம்—அழுக்கு, குற்றம். ௨.
கஞ்சிகை—தண்டிகை, வஸ்திரம், இடுதிரை. ௩.

# டகரவெதுகை.

நடலையென்பது—வஞ்சனை, பொய், அசைவு. ௩.
மடல்—பனையேடுபோல்வன, பூவிதழ், ஒருபிரபந்தம். ௩.
படர்—வழி, நினைப்பு, துன்பம், படைவீரர். ௪.
குடம்—பட்டணம், பசு, ஒருகூத்து, குடம், வெல்லக்கட்டி. ௫.

மாடம்—உழுந்து, வீடு. ௨. மழை—குளிர்ச்சி, மேகம். ௨.
கூடம்—வீடு, மறைவு, கொல்லன்சம்மட்டி, மலையினுச்சி. ௪.
சேடன்—ஒருசாதியான், தோழன், அனந்தன். ௩.
கேடகம்—பரிசை, ஊர், பலகை. ௩.

இடங்கரேமுதலைதூர்த்தர்குடங்கரிம்முப்பேரென்ப
முடங்கலேமடங்கல்கைதைமூங்கிலேயோலையம்பேர்
படங்குமேற்கட்டியென்பபகர்பெருங்கொடியுமாகும்
விடங்கமேர்கொடிகொடுங்கைமிதவையேதெப்பஞ்சோறும். (௩)

குடிஞைபுட்பொதுவும்யாறுங்கூகையுமாகுமென்ப
தடிவயலுலக்கைவில்லுத்தண்டுமின்றசையுமாம்
தொடிவளையொருபலப்பேர்சூழ்ந்தகங்கணமுமாகும்
மடியடங்குதலேசோம்புவயிறுகோய்புடைவைதாழை. (௪)

படிவமேவடிவநோன்பாம்பந்தமேகிளையுங்கட்டும்
வெடியச்சம்பரிமளிக்குமென்புகைவெளியிம்முப்பேர்
துடியேலம்பறைகாலப்பேர்துத்துய்துன்பற்றுக்கோடாம்
கொடிறுபூசங்கதுப்பாங்குரவையேகடலோர்கூத்து. (௫)

கடிகைநாழிகையேதுண்டங்கதவிதோழேமுப்பேர்
படிறுபொய்களவிரண்டாம்பகர்தலேவிற்றல்பேசல்
சுடிகையேமகுடமுச்சிசுட்டியுமிட்டபேரே
இடியிடிப்பேரேநென்மாவேற்றிமேறுதிச்சொல்லே. (௬)

நாடிநாழிகைநரம்பாநந்தல்கேடேனையாக்கம்
பாடியேசேரிநாடுபாசறையாயவூர்ப்பேர்
கோடிகத்துகில்பூந்தட்டாங்குடம்பையேமுட்டைகூடு
கோடியென்புதுமைமதுசாங்குமுடியேவெற்றியுச்சி. (௭)

உடுவிண்மீனிடங்குநாவாயோட்டுங்கோலம்பிலிர்க்காம்
கடுவிடமுள்ளுத்தானேயரிதகிகசப்புநாற்பேர்
படுமரக்குலையேகள்ளுப்பரவுநீர்நிலைகன்மைப்பேர்
படுதலேயொலியின்றூதல்பகரிரண்டாதல்பூத்தல். (௮)

மாடுபொன்பக்கஞ்செல்வம்வைகல்வைகறைநாடங்கல்
சேடென்பபெருமைநன்மைதிரட்சியேயழகுநாற்பேர்
பாடிடம்பெருமையோசைபட்டேபட்டாடைசிற்றூர்
ஈடென்பகுழைவேயொப்பேவலியொடுபெருமையும்பேர். (௯)

மடையென்பமதகுசோறுமணிப்பணிக்கடைப்பூட்டும்பேர்
படைபடைக்கலங்கலப்பைபடுக்கைபல்லணமேதானை
இடைநடுவென்பமற்றுமிடப்பெயர்நுசுப்புமாமே
மடமறியாமைசத்திரமன்னியமுனிவாசப்பேர். (௰)

இடங்கரென்பது—முதலை, தூர்த்தர், குடம். க.
முடங்கல்—மடங்குதல், தாழை, மூங்கில், நோய், ஓலை. ரு.
படங்கு—மேற்கட்டி, பெருங்கொடி. உ.
விடங்கம்—அழகு, வீதியிற்கட்டியகொடி, கொடுங்கை. க.
மிதவை—தெப்பம், சோறு. உ.
குடிஞை—பறவைப்பொது, நதி, கோட்டான். க.
தடி—வயல்,உலக்கை,வில்லு,தண்டாயுதம்,மின்னல்,தசை, உடம்பு.
தொடி—கைவளை, ஒருபலம், கங்கணம். க.
மடி—அடங்குதல், சோம்பல், வயிறு, நோய்,புடைவை,தாழை. சு.
படிவம்—உருவம், நோன்பு. உ. பந்தம்—உறவு, கட்டு. உ.
வெடி—பயம், நறும்புகை, வெளி, க. * துடி—ஏலம், பறை, கால
நுட்பம். க. தூ—சுத்தம், தசை, பற்றுக்கோடு. க.
கொடிறு—பூசநட்சத்திரம், கதுப்பு. உ. குரவை—கடல், கைகோ
த்தாடல். உ.
கடிகை—நாழிகை, துண்டம், கதவிடுதாழ். க.
படிறு—பொய், களவு. உ. பகர்தல்—விற்றல், பேசுதல். உ.
சுடிகை—முடி, உச்சி, சுட்டி. க.
† இடி—இடி, நென்மா, உறுதிச்சொல். க.
நாடி—நாழிகை, நரம்பு. உ. நந்தல்—கேடு, ஆக்கம் உ.
பாடி--நகரம்,நாடு,பகைமேற்சென்றோருறைவிடம்,முல்லைநிலத்தூர்
கோடிகம்—வஸ்திரம், பூந்தட்டு. உ. குடம்பை—முட்டை,கூடு. உ.
கோடி—ஓரெண், புதுமை,வஸ்திரம். க. குடுமி—வெற்றி, உச்சி.உ.
உடு—நட்சத்திரம்,அகழி,மரக்கலமோட்டுங்கோல், அம்புச்சிறகு.ச.
கடு—நஞ்சு, முள், கடுமரம், கசப்பு. ச.
படு—மரக்குலை, கள், நீர்நிலை, நன்மை. ச.
படுதல்—ஒலித்தல், அழிதல், உண்டாதல், பூத்தல். —
மாடு—பொன், பக்கம், செல்வம். க.
வைகல்—விடியற்காலம், நாள், தங்குதல். க. சேடு—பெருமை,
நன்மை, திரட்சி, அழகு. ச. பாடு—இடம், பெருமை, ஓசை.
பட்டு—பட்டுவஸ்திரம், சிற்றூர். உ.
ஈடு—குழைவு, ஒப்பு, வலிமை, பெருமை. ச.
மடை—மதகு, சோறு, அணிகளின்கடைப்புணர்வு. க.
படை—ஆயுதம், கலப்பை, நித்திரை, குதிரைக்கலணை, சேனை. ரு.
இடை—நடு, இடம், இல்லை. க.
மடம்—அறிவின்மை, சத்திரம், முனிவரிருப்பிடம். க.

---

* துடி - இடைசுருக்குபறை, குறிஞ்சிப்பறை, பாலைப்பறை.
† இடி - மாப்பொதுவின்பெயருமாம்.

வாடையென்பதுதான்வீதிவடகாற்றுத்தானுமாமே
ஆடுமேழகம்வெற்றிப்போரல்களுள்கருங்கல்லைகல்
கோடைமேல்காற்றிஞேடுகுதிரைவெண்காந்தளென்ப
ஓடைநீர்நிலையிடங்கேயொருமரம்வல்லிபட்டம். (௧௧)

அடைப்பென்பபாணிநாளேயச்சமேகல்விமுப்பேர்
வடுச்செம்புதழும்புவண்டாமத்தகநெற்றிசென்னி
இடக்கரேமறைத்தயார்த்தைகும்பமுமென்பநூலோர்
கடைப்பிடிமறப்பிலாமைகருதியதேற்றமாமே. (௧௨)

பட்டமேயோடைதூசுபதவியாள்கவரிமாவாம்
புட்டமேகாகமாகும்புடைவையுநிறைவுமுப்பேர்
குட்டமேதொழுநோயாழங்குளமெனப்பெயர்முப்பாற்றே
வட்டமேபரிசைக்கச்சால்வலயங்கைம்மணிதூருர்கோள். (௧௩)

திட்டையேயுரலுமேடுந்திண்ணையுமென்னுமுப்பேர்
தட்டைவேய்திணைத்தாள்கிள்ளைதனைக்கடிகோலமுண்டம்
ஒட்டியேதலைவீற்றுவாங்கிருட்டியாக்தாளமுப்பேர்
கட்டளைநிறைகல்லொப்பேயிட்டிகையியற்றலாணி. (௧௪)

நாட்டங்கண்ணோர்பண்வாளாநாகுசங்கிளமைநத்தை
ஓட்டமேதுதடேதோல்வியுமோரெண்பகாற்றேசீவன்
கோட்டங்கோண்படப்பைநாடுகோயிலவ்வியமான்கொட்டில்
தோட்டியங்குசங்கபாடந்துணையென்பதளவுமொப்பும். (௧௫)

தடமலைபெருமைகோணஞ்சரிகரையகலம்வாவி
அடல்கொலைவலிபோராகுமருத்தமேபொருள்பொன்பாதி
உடல்பொருளாகமென்பவோங்கல்வெற்புயரமூங்கில்
விடபமேயிடபராசிவிடைமரக்கொம்புமுப்பேர். (௧௬)

கடகமேசேனைவட்டங்கைவளைமதிற்பேரே
வடகந்தோலத்தவாளம்வலமென்பதிடமேவெற்றி
படுவிகள்விற்பாள்குண்டம்பரமென்பகவசமெய்யாம்
கொடிபிதிர்விளவியாகுநாணிச்சயமேகுன்றல். (௧௭)

கடங்கவிறுவாக்கதுப்புக்கான்சுரமுடம்புநீதி,
குடங்கடாமீமம்பானைக்குழாங்கடன்முழுவைத்தேழாம்
மடங்கலேயசனிசீயமறலிசோயுகமூழித்தீ
படங்கிழிகபடாகந்துகில்பாம்பின்பணமுப்பேரே. (௧௮)

வாடையென்பது—தெரு, வடகாற்று. உ. ஆடு—ஆடு, வெற்றி. உ.
அல்கல்—நாள், குறைதல், தங்குதல். ௩.
கோடை—மேல்காற்று, குதிரை, வெண்காந்தள். ௩.
ஓடை—நீர்நிலை, அகழ், ஒருவகைமரம், ஒருவகைக்கொடி, நெற்றிப் பட்டம். ரு.

அடுப்பு—பரணிநட்சத்திரம், அச்சம், அடுப்பு. ௩.
வடு—செம்பு, தழும்பு, வண்டு. ௩. மத்தகம்—நெற்றி, தலை. உ.
இடக்கர்—மறைத்தசொல், * குடம். உ.
கடைப்பிடி—மறவாமை, தேற்றம். உ.

பட்டம்—குளம், வஸ்திரம், பதவி, வாள், கவரிமா. ரு.
புட்டம்—காக்கை, சீலை, நிறைவு. ௩.
குட்டம்—குட்டரோகம், ஆழம், குளம். ௩.
வட்டம்—பரிசை, நீர்ச்சால், வட்டம், கைம்மணி, சீலை, பரிவேடம். சு.

திட்டை—உரல், மேடு, திண்ணை. ௩.
தட்டை—மூங்கில், தினைத்தாள், கிளிகடிகோல், மொட்டை. ச.
கிட்டி—தலையீற்றுப்பசு, பன்றி, தாளம். ௩.
கட்டளை—நிறைப்படிகருவி, உவமை, செங்கலியற்றுங்கருவி, அதிர யறிகருவி. ச.

நாட்டம்—கண், ஒருபண், வாள். ௩. நாகு-சங்கு, இளமை, நத்தை.
ஒட்டம்—மேலுதடு, தோல்வி. உ. உயிர்—காற்று, சீவன். உ.
கோட்டம்—வளைவு, மருதநிலத்தூர், நாடு, கோயில், அழுக்காறு, பசுச்சாலை. சு.
தோட்டி—யானைத்தோட்டி, கதவு. உ. துணை—அளவு, ஒப்பு. உ.

தடம்—மலை, பெருமை, வளைவு, வழி, நீர்க்கரை, அகலம், குளம். எ.
அடல்—கொல்லுதல், வலி, போர். ௩. அருத்தம்—சொற்பொருள், பொன், பாதி. ௩.
உடல்—பொன், உடம்பு. உ. ஓங்கல்—மலை, உயர்ச்சி, மூங்கில். ௩.
விடபம்—இடபராசி, இடபம், மரக்கொம்பு. ௩.

கடகம்—சேனை, வட்டம், கைவளை, மதில். ச.
வடகம்—தோல், அத்தவாளம். உ. வலம்—இடம், வெற்றி. உ.
படிவி—கள்விற்பவள், தொழுத்தை. உ. பரம்—கவசம், சரீரம். உ.
நொடி—விடுகதை, சொல். உ. நூனம்—நிச்சயம், குறைதல். உ.
கடம்—கயிறு, யானைக்கவுள், காடு, அருநெறி, உடம்பு, நீதி, குடம், யானைமதம், சுடலை, யானைக்கூட்டம், கடன், குடமுழா. கஉ.
மடங்கல்—இடி, சிங்கம், யமன், நோய், யுகம், ஊழித்தீ. சு.
படம்—யானைமுகபடாம், சீலை, பாம்பின்படம். ௩.

* இடங்கர் - குடம்.

ஆடவேபெண்ணுண்கூடல்வார்த்தைகூத்தாடல்வென்றி
பாடலஞ்சிவப்பினேபோதிரிருதிரைமூப்பேர்
கோடரங்குரங்குசோலைகொம்பொருதிரையாகும்
ஆடவர்புருடர்நாமமாயிளையவர்க்கும்பேரே. (௧௯)

கடிமணம்விரைவுகூர்மைகாலம்பேய்விளக்கங்காப்பு
வடிவச்சம்வாசமையம்வரைவுவிம்மிதமேழாறும்
வடுகேயிந்தளராகப்பேர்மருதயாழ்த்திறனுமாமே
வடவையேகுதிரைப்பெட்டையுவாப்பிடிவடவைத்தீயாம். (௨0)

கோடுசெங்கூதுகொம்புமரக்கொம்புவிலங்கின்கொம்பு
நீடுசெய்வரம்புகுன்றின்முகடுநீர்க்கரையேழ்பேராம்
மோடுமேடுதரமாகுமுறுவலேநகைத்தல்பல்லாம்
ஆடியேயோர்மாதங்கண்ணாடியுத்தராடமாமே. (௨௧)

தட்டுத்தேர்நடுவுறுப்புத்தட்டொடுபரிசைமுட்டாம்
செட்டிவாணிகன்செவ்வேளாஞ்செப்புரைகரண்டகப்பேர்
மட்டென்பதெல்லைகள்ளாமார்க்கமேசமயம்வீதி
பட்டிகையென்பகச்சுப்பகடேனிரதமாமே. (௨௨)

கடைமுடிவிடம்வாயிற்பேர்களேவரம்பிணைமுடம்பாம்
உடைதுகில்செல்வமென்பவுடைக்கைதன்னுடைமைதுகிற்பேர்
அடையிலைகணமேயப்பமடுத்தல்செல்வழியைம்பேராம்
கடைவழியொழுக்கஞ்செல்வநாரென்பகயிறன்பாமே. (௨௩)

விடையெதிர்மொழியுமேறும்விடுத்தலும்விளம்புமுப்பேர்
இடைசடையுவமைகட்டிகீதமேயிசையும்வண்டும்
படியங்கவடிசோபானம்பலகைகுணமுவமைபாராம்
குடிகுலம்புருவமூராங்கொடிவல்லிதுவசங்காக்கை. (௨௪)

நட்டமேநடனங்கேடாகரென்பமனையுமூரும்
தொட்டலென்பதுவேயுண்டறோண்டல்கைநீண்டன்முப்பேர்
தட்டலேதடைகிட்டற்பேர்தையொருமாதம்பூசம்
கட்டலென்பதுதடுத்தல்களைதல்பறித்தல்கன்னல். (௨௫)

புட்கரநிறைவுபாண்டமுகத்தீர்த்தம்புனல்வான்சேனம்
கட்கம்பங்கயமேயானைக்கைத்துனிருகீரைந்தாம்
வெட்சியென்பதுவேசெச்சையிருநிரைகவர்தலென்ப
பெட்பென்பபெருமையன்பாம்பிரசத்தேன்மதுவண்டாமே. (௨௬)

ஆடலென்பது—பெண்ணுண்கூடல்,சொல்லல்,கூத்தாடல்,வெற்றி
பாடலம்—சிவப்பு, பாதிரிமரம், குதிரை. ௩.
கோடரம்—குரங்கு, சோலை, மரக்கொம்பு, குதிரை. ௪.
ஆடவர்—ஆண்மக்கள், இளைஞர். ௨.

கடி—விவாகம், விரைவு, கூர்மை, காலம், பேய், விளக்கம், காவல்,
அல்குல், அச்சம், மணம், சந்தேகம், நீக்கல், அதிசயம். ௧௩.
வடுகு—இந்தளராகம், மருதயாழ்த்திறம். ௨.
வடவை—பெண்குதிரை, பெண்யானை, ஊழித்தீ. ௩.

கோடு—சங்கு, ஊதுகொம்பு, மரக்கொம்பு, விலங்கின்கொம்பு, வரம்பு, மலையினுச்சி, நீர்க்கரை. ௭.
மோடு—மேடு, வயிறு. ௨. முறுவல்—சிரித்தல், பல். ௨.
ஆடி—ஒருமாதம், கண்ணாடி, உத்தராடநட்சத்திரம். ௩.

தட்டு—தேர்நடு, குற்றம், முறம், தோற்பலகை, விக்கினம். ௫.
செட்டி—வாணிகன், சுப்பிரமணியன்.௨.செப்பு-சொல், கரண்டகம்.
மட்டு—எல்லை, கள். ௨. மார்க்கம்—சமயம், தெரு. ௨.
பட்டிகை—கச்சு, தெப்பம், அரைஞாண். ௩.

கடை—முடிவு, இடம், வாயில். ௩. களேவரம், பிணம், உடம்பு.
உடை—வஸ்திரம், செல்வம்.௨.உடுக்கை—தண்ணுமை, வஸ்திரம்.
அடை—இலை, கனம், அப்பவர்க்கம், அடுத்தல், வழி. ௫.
நடை—வழி, ஒழுக்கம், செல்வம். ௩. நார்—கயிறு, அன்பு. ௨.

விடை—எதிர்மொழி, இடபம், விடுத்தல்.௩.இடை-சடை, உவமை,
நெட்டி. ௩. கீதம்—இராகம், வண்டு. ௨. படி—குதிரையங்கவடி, கற்படி, பகை, குணம், ஒப்பு, பூமி. ௬.
குடி—குலம், புருவம், ஊர். ௩. கொடி—படர்கொடி, துகிற்கொடி,
காக்கை. ௩.

நட்டம்—கூத்து, கேடு. ௨. நகர்—வீடு, ஊர். ௨.
தொட்டல்—உண்டல், தோண்டுதல், கையாற்றொடுதல். ௩.
தட்டல்—தடுத்தல், கிட்டுதல்.௨. தை—ஒருமாதம், பூசநட்சத்திரம்.
கட்டல்—தடுத்தல், பறித்தல், கட்டுதல், களவு. ௪.

புட்கரம்—நிறைவு, பாண்டமுகம், தீர்த்தம், நீர், ஆகாயம், பருந்து,
வாள், தாமரை, யானைத்துதிக்கைநுதி, குருகு. ௧௦.
வெட்சி—வெட்சிச்செடி, பகைஞர்பசுக்கூட்டத்தைக்கவர்தல். ௨.
பெட்பு—பெருமை, அன்பு. ௨ பிரசம்—தேன், கள், வண்டு. ௩.

அடுதலேயட்டலென்பவடர்தலுங்கொலையுமப்பேர்
சடிலமேநெருங்கலோடுசடைகுநிரையுமப்பேரே
படலையேபடர்தன்மாலைபதலையேவாசிக்கோவை
இடுதேர்மரச்சுற்றின்பேர்பரிசைக்குங்கிளத்தலாமே. (உஎ)

படலிகைபேர்க்குவட்டம்பரக்தகைம்மணிபூத்தட்டாம்
கொடியனேகொடியன்கேதாங்குண்டாழக்தாழ்வாண்மாவே
தொடுவென்பமருநப்பூமிதோட்டங்கைதவமுப்பேரே
முடிமயிர்முடியேசென்னிமகுடமுமொழியலாமே. (உஅ)

பூட்கத்துவரைபொன்னுமஞாறிவிலரேதக்கம்
கோடகமுடியுறுப்புக்குதிரையும்புதையும்பேர்
பீடிகையாவணம்பூத்தட்டொடுபீடமுப்பேர்
தோடுபூவிதழேபெண்ணைமடல்போல்வதொகுதிக்கும்பேர். (உகூ)

அடரென்பநெருங்குதற்பேரைம்மையின்வடிவுமாகும்
விடர்முனிவிருப்புத்தூர்த்தர்கமர்வெற்பின்முழைகாடைம்பேர்
விடலையேதலைவன்பேரும்விறலோன்றன்பேருமாகும்
அடிசெண்டுவெளிதாளாதிகவிதையின்பாதமாமே. (௩0)

டகரவெதுகை முற்றிற்று.

ஆ விருத்தம் - எ௩.

---

## ணகரவெதுகை.

புணர்வுதோய்த்திடலிசைப்பாம்பொழில்புவிபெருமைசோலை
உணர்வென்பதெளிவேயூடலொழிதலேயறிவுமாகும்
குணமென்பகயிறுபண்புகும்பம்வின்னாணிநாற்பேர்
கணமுடுநோய்திரட்சிகாலநுட்பம்பேய்வட்டம். (க)

ஆணமேருழும்போடன்பாமலநாஞ்சிலமைவுமாமே
இணைமாயோனுளாருமூறியமிலாபங்கல்வி
காணமேபரிபூண்செக்கோர்கன்னல்பொற்காசுநாற்பேர்
கோணமேமாறுபாடுங்கூனுமாம்வளைவுமாமே. (உ)

குணில்குறுந்தடிகடிப்பாங்குல்லையேதுளவுவெட்சி
மணிகவமணியேகண்ணடைவனப்பொடுகருமைகண்மை
துணிசோதிகாவேதுண்டந்துணிமழைத்துளிபெண்ணுமை
பிணிமுகமயில்புட்பேராம்பிணிதீர்சிறைச்சிவேம்பு. (௩)

அடுதலென்பது—சமைத்தல், நெருங்கல், கொல்லுதல். ௩.
சடிலம்—நெருங்குதல், சடை, குதிரை. ௩.
படலை-பரந்தவடிவு,பூமாலை,வாயகன்றபறை,குதிரைக்கிங்கிணிமாலை
இடுகு—தேர்மரச்சுற்று, பரிசை. உ.

படலிகை—பீர்க்கு, வட்டவடிவு, கைம்மணி, பூந்தட்டு. ௪.
கொடியன்—தீயன், கேது. உ. குண்டம்—ஆழம்,தாழ்வு,ஆண்குதிரை
தொடு—மருதநிலம், தோட்டம், வஞ்சகம். ௩.
முடி—மயிர்முடி, தலை, கிரீடம். ௩.

ஆடகம்—துவரை, பொன். உ. அஞர்—அறிவிலார், துக்கம். உ.
கோடகம்—முடியுறப்பு, குதிரை, புதுமை. ௩.
பீடிகை—கடைவீதி, பூந்தட்டு, பீடம். ௩.
தோடு—பூவிதழ், பனைமடல்போல்வன, கூட்டம். ௩.

அடர்—நெருங்கல், தகட்டுவடிவு. உ.
விடர்—முனிவரிருப்பிடம்,தூர்த்தர்,நிலம்பிளப்பு,மலைப்பிளப்பு,காடு
விடலை—பாலைநிலத்தலைவன், வெற்றியாளன். உ.
அடி—குதிரைவையாளிவீதி, கால், முதல், பாட்டினடி. ௪.

# ண கர வெ து கை.

புணர்வென்பது—கலவி, இசைபபு. உ. பொழில்—பூமி, பெருமை,
சோலை. ௩.
உணர்வு—தெளிவு, ஊடலொழிதல், அறிவு. ௩.
குணம்—கயிறு, குணம, குடம, நாணி. ௪.
கணம்—நட்சததிரம, ஓர்நோய்,கூட்டம,காலநுட்பம்,பேய்,வட்டம்

ஆணம்—குழம்பு, அன்பு. உ. அலம்—கலப்பை, அமையுமென்றல்.
ஓணம்—திருவோணம், ஆறு. உ. ஊதியம்—இலாபம், கல்வி. உ.
காணம்—கொள்ளு, செக்கு, ஒருகட்பிராணி, பொற்காசு. ௪.
கோணல்—மாறுபாடு, கூன், வளைவு. ௩.

குணில்—குறுந்தடி, பறையடிக்குங்குறுந்தடி. உ. குல்லை—துளசி,
வெட்சி. உ. மணி-நவமணி, யானைமணி, அழகு, கறுப்பு,நன்மை.
துணி—சோதிநட்சத்திரம், துண்டம். உ. துளி—மழைத்துளி, பெ
ண்ணுமை. உ. பிணிமுகம்—மயில், பறவைப்பொது. உ.
பிசிதம்—நீர், இறைச்சி, வேம்பு. ௩.

காணிலச்சைப்பேர்தானேகயிறென்றுகாட்டலாகும்
தோணியேகடைகாள்வங்கந்தோமேகணைதெப்பஞ்சேறு
வாணியேயோர்கூத்தின்பேர்வாக்குநாமகளுமாமே
ஏணியேயுலகோடெல்லையிறைவைமாவென்றுஞ்சொல்லும். (௪)

திணைநிலங்குலமொழுக்கஞ்செவியென்பகாதுகேள்வி
பிணையாசைவிலங்கின்பெண்பேர்பிலவங்கங்குரங்குதேரை
கணையம்புதிரட்சியும்பேர்கட்சியேகாடுங்கூடும்
பணைவயல்பரியின்பந்திபருத்தல்வேயரசுபீடாம். (௫)

யாணரேபுதுமைதச்சரெய்தியவனப்புநன்மை
பாணந்தான்மேகவண்ணக்குறிஞ்சிபெய்கணையும்பட்டாம்
சேணெனபதகலநீளஞ்செப்பிடிலுயரமும்பேர்
ஆணைமெய்யுடனேவெனறிருளேவலாணைறம்போ. (௬)

அண்டமாகாயமுட்டையயிலெலன்பவேலேகூர்மை
துண்டமேசாணைப்பாம்புதுணியொடுவெதனமூக்காம்
கண்டமேகவசமெல்லைகழுத்திடுதிரைவண்டம
முண்டகந்தாழைபூகள்ளுமுளரியந்தகமுண்மூலம். (௭)

அண்டரேபகைவர்வானோராயரென்றுரைக்கும்பேர்
கண்டனேசூரனாளுங்குறழும்வேறுகாட்டும்
கண்டல்கேதகைமுள்ளிப்போகரைதலைவிளிதலோசை
பண்டம்பொன்பணிகாரம்போபாகுபால்குழம்பாகமாம். (௮)

விண்டென்பமாபோன்வெற்புமேகமேமூங்கில்காற்றும்
தொண்டென்பழமையொன்பானெறிபூயபொவழிபாடாமே
தண்டென்டகுழாமேவீணைதடிபடையிதணமேந்தி
வண்டென்பசங்குக்குற்றம்வளையளிவாளியம்போ. (௯)

ண்டையேதிரளையாகுமுறுபடைவகுப்புமென்ப
தொண்டையாதொண்டைகொவ்வைதூங்கும்யானைத்துதிக்கை
கொண்டையேமயிர்முடிக்குமிலந்தையின்கனிக்குங்கூற்றாம்
கண்டிகைபதக்கம்வாகுவலயமேகலன்பெய்செப்பு. (௧0)

தண்ணமோர்கட்பறைப்பேர்தறித்திமேழுவுமாகும்
வண்ணமோர்சந்தம்பண்பாமறையிராசியமேவேதம்
பண்ணென்பபாட்டும்பண்ணும்பரிமாவின்கலணையும்பேர்
மண்ணனுமொப்பனைப்பேர்மழவின்மார்ச்சனையுமாமே. (௧௧)

காணெண்பது—வெட்கம், கயிறு. உ.
தோணி—இரேவதிநட்சத்திரம்,மரக்கலம்,அம்பு,தெப்பம்,சேறு. ரு.
வாணி—ஒருகூத்து, சொல், சரசுவதி. ௩.
ஏணி—உலகம், எல்லை, ஏணி, மாண். ௪.

திணை—நிலம், சாதி, ஒழுக்கம். ௩. செவி—காது, கேள்வி. உ.
பிணை—ஆசை, விலங்கின்பெண். உ. பிலவங்கம்—குரங்கு,தேரை.
கணை—அம்பு, திரட்சி. உ. கட்சி—காடு, பறவைக்கூடு. உ.
பணை—வயல்,குதிரைப்பந்தி,பருமை,மூங்கில்,அரசமரம்,பெருமை

யாணர்—புதுமை, தச்சர், அழகு, நன்மை. ௪.
பாணம்—மலைவண்ணக்குறிஞ்சி, அம்பு, பட்டுவஸ்திரம். ௩.
சேண்—அகலம், நீளம், உயரம். ௩.
ஆணை—உண்மை, வெற்றி, சத்தியம், ஏவல். ௪.

அண்டம்—ஆகாயம், முட்டை. உ. அயில்—வேலாயுதம்,கூர்மை.
துண்டம்—சாரைப்பாம்பு, துணி, மூகம், மூக்கு. ௪.
கண்டம்—கவசம், வெல்லம், கழுத்து, இடுதிரை,வாள்,துண்டம்.௬.
முண்டகம்—தாழை, கள், தாமரை, நெற்றி, முட்செடி. ரு.

அண்டர்—பகைவர், தேவர், இடையர். ௩.
சுண்டன்—சதயநட்சத்திரம், மூஞ்சூறு. உ. கண்டல்—தாழை, முள்ளிச்செடி. உ.
கரைதல்—அழைத்தல்,ஒலித்தல்.உ. பண்டம்-பொன்,பலபண்டம்.
பாகு—பங்கு, குழம்பு, பாக்கு. ௩.

விண்டு—விட்டுணு, மலை, மேகம், மூங்கில், காற்று. ரு.
தொண்டு—பழமை, ஒன்பது, அடிமை, வழிபாடு. ௪.
தண்டு—குழாய், வீணை, தடி, சேனை, மிதுனராசி, ஓந்தி. ௬.
வண்டு—சங்கு, குற்றம், கைவளை, வண்டு, அம்பு. ரு.

உண்டை—திரட்சி, படைவகுப்பு. உ.
தொண்டை—ஆதொண்டைச்செடி, கொவ்வை,யானைத்துதிக்கை.௩.
கொண்டை—மயிர்முடி, * இலந்தைக்கனி. உ.
கண்டிகை—பதக்கம், வாகுவலயம், ஆபரணச்செப்பு. ௩.

தண்ணம்—ஒருகட்பறை, மழு. உ.
வண்ணம்—அழகு, நிறம், குணம். ௩. மறை—மறைவு, வேதம். உ.
பண்—இசைப்பாட்டு, பண், குதிரைக்கலனை. ௩.
மண்—அணு, ஒப்பனை, மார்ச்சனை. ௩.

* கோண்டை - இலந்தைக்கனி.

அணங்குநோயழகுதெய்வமாசைபெண்கொலைவருத்தம்
துணங்கையேவிழாப்பேய்க்கூத்தாமாதிரைநாளுஞ்சொல்லும்
குணுங்கர்தோற்கருவிமாக்கள்குயிலுவரிழிஞர்முப்பேர்
துணங்கறலிருள்விழாவாந்தோன்றலேசுதனுதன்பேர். (கஉ)

புணரியேவாரிநீரிற்பொருதிரைகரைமுப்பேராம்
பணிலமேசலஞ்சலஞ்சங்கிருபெயர்ப்பகரலாமே
கணிவேங்கைமரமதாகுங்கழனிசூழ்மருதமும்பேர்
பணியேதோற்கருவிவார்த்தைபாம்புசெய்தொழிலுமாமே. (கங)

பாணியூர்சீர்கையோசைபற்றுக்கான்போதுநாடு
சேணுறுசோலைபண்டஞ்சிறந்தபல்லியம்பன்னொன்றும்
தாணுவேவசைலங்குற்றிசங்கரனிலைதூணும்பேர்
வேணியேசடைவிசும்பாம்வியாளமேபுலியும்பாம்பும். (கச)

குண்டலங்குழைவிசும்பாங்குபேரனேதனதன்சோமன்
மண்டலம்பரியூர்வட்டமந்தியேயூகம்வண்டு
கொண்டலேமுகில்கீழ்காற்றுங்கோட்டியேவாயில்கூட்டம்
மண்டலிபூனைபாம்புமண்ணொடுநாயுமாமே. (கரு)

புண்டரீகந்திக்கானைபுலிவண்டுகழுகுகஞ்சம்
தண்டமேயானைசெல்லும்வழிதண்டாயுதங்குடைக்கால்
பிண்டிநென்மாவசோகாம்பிதாச்சிவன்பிரமனூர
கண்டகஞ்சுரிகைமுள்வாள்களவென்பகளாச்சோரப்பேர். (கசு)

பண்ணவன்முனிவன்றேவன்பகர்குருவருகனாற்பேர்
தண்ணடைமருதஞ்சாரூர்காடெனவிருபேர்சாற்றும்
வண்மையேவழங்கல்வாய்மைவளம்புகழ்வலியாமென்ப
ஒண்மையேமிகுதிநன்மையொழுங்கறிவழகைம்பேரே. (கஎ)

எண்வலியெள்ளிலக்கமெளிமைசோதிடம்விசாரம்
கண்ணிடங்கணுவேய்கண்ணுங்காஞ்சிமேகலையோர்பண்ணும்
விண்முகில்சுவர்க்கம்வானும்விபுலம்பார்விரிவுபீடு
பண்ணையேவயனீர்த்தாழ்வுமருதமாத்துயிலும்பாழி. (கஅ)

காண்டமேதிரைகாடம்புகமண்டலங்கலன்பெய்செப்பு
நீண்டகோன்முடிவுஞ்சீர்படைக்கலமீரைந்தாம்
பாண்டிலேறூர்திவட்டம்பணைகட்டில்விளக்குத்தாளம்
ஈண்டென்பதிவ்விடத்தோடிப்படிசடிதியும்பேர். (ககூ)

அணங்கென்பது—நோய், அழகு, தெய்வம், ஆசை, பெண், கொலை, வருத்தம். ஏ.
துணங்கை—திருவிழா, பேய்க்கூத்து, திருவாதிரைநட்சத்திரம். ௩.
குணுங்கர்--தோற்கருவியாளர், நரப்புக்கருவியாளர், சண்டாளர். ௩.
துணங்கறல்—இருள், உற்சவம். உ. தோன்றல், மகன், அரசன். உ.
புணரி—கடல், கடற்றிரை, கரை. ௩.
பணிலம்—சலஞ்சலம், சங்கு. உ.
கணி—வேங்கைமரம், மருதநிலம். உ.
பணி—தோற்கருவி, சொல், பாம்பு, தொழில். ச.
பாணி—ஊர், நீர், கை, ஓசை, பற்று, காடு, காலம், நாடு, சோலை, பலபண்டம், வாச்சியப்பொது. கக.
தாணு—மலை, குற்றி, சிவன், நிலைபெறுதல், தூண். ௫.
வேணி—சடை, ஆகாயம். உ. வியாளம்—புலி, பாம்பு. உ.
குண்டலம்—குண்டலம், ஆகாயம். உ. குபேரன்-குபேரன், சந்திரன்.
மண்டலம்—குதிரை, ஊர், வட்டம். ௩. மந்தி—குரங்கு, வண்டு. உ.
கொண்டல்—மேகம், கீழ்காற்று. உ. கோட்டி—வாயில், கூட்டம்.
மண்டலி—பூனை, பாம்பு, பூமி, நாய். ச.
புண்டரீகம்—தென்கீழ்த்திசையானை, புலி, வண்டு, கழுகு, தாமரை.
தண்டம்—யானைசெல்லும்வழி, தண்டாயுதம், குடைக்காம்பு. ௩.
பிண்டி—கொன்யா *, அசோகமரம். உ. பிதா—சிவன், பிரமன், பெருநாரை. ௩.
கண்டகம்—உடைவாள், முள், வாள். ௩. களவு-களாச்செடி, திருட்டு
பண்ணவன்—முனிவன், தேவன், குரு, அருகன். ச.
தண்ணடை—மருதநிலத்தூர், நாடு. உ.
வண்மை—கொடை, உண்மை, வளமை, புகழ், வலிமை. ௫.
ஒண்மை—மிகுதி, நன்மை, ஒழுங்கு, அறிவு, அழகு. ௫.
எண்—வலி, எள், இலக்கம், எளிமை, சோதிடநூல், ஆலோசனை. சு.
கண்—இடம், மரக்கணு, மூங்கில், கண். ச. காஞ்சி-மேகலை, ஒருபண். உ.
விண்-மேகம், தேவலோகம், ஆகாயம். ௩. விபுலம்-பூமி, விசாலம், பெருமை. ௩. பண்ணை-வயல், குளம், மருதநிலம், விலங்கின்படுக்கை.
காண்டம்—இடுதிரை, காடு, அம்பு, கமண்டலம், பூண்கொள்கலம், கோல், முடிவு, வஸ்திரம், நீர், ஆயுதம். ௧௦.
பாண்டில்—எருது, பரிகள்பூண்டேர்க்குமூர்தி, வட்டம், மூங்கில், கட்டில், விளக்கின்றகழி, தாளம். எ.
ஈண்டு—இவ்விடம், இவ்வண்ணம், விரைவு. ௩.

* பிண்டி - மாப்பொதுவின் பெயருமாம்.

அண்டசமுதலையோக்கியரணைபுள்ளுமெம்புபல்லி
கண்மீன்றவளையாமைகாகம்பிப்பியுமீராறும்
சண்டன்கூற்றலிவெய்யோனுக்தான்கரவுறுதாள்பாதம்
கண்டையேசண்டைகள்ளாஞ்சொர்க்கமேசுவர்க்கங்கொங்கை.(௨௦)

பணமென்பதரவின்பையும்பாம்பும்பொற்காசும்பேர்
மணமென்பவாசங்கூட்டம்வதுவையுமாகுமென்ப
பணவையேபரணும்பேயும்பையுளேசிறுமைநோயாம்
துணவையென்றேலைபிண்டிநுனியென்பநுதிநுண்மைப்பேர்.(௨௧)

ணகரவெதுகை முற்றிற்று.

ஆ விருத்தம் - கூச

## தகரவெதுகை.



மதலையேகொன்றைபின்னைமரக்கலங்கொடுங்கைதூணும்
சிதலைநோய்துணிசெல்லென்பசிதநீர்குளிரேமேகம்
பதலையோர்கட்பறைப்பேர்பருவரைதாழிக்கும்பேர்
கதலியேவாழைதேற்றுக்காற்றூடிதுவசநாற்பேர். (௧)

இதழ்பனையேபூவினிதழுதடெனவிம்மூப்பேர்
கதழ்வுவேகஞ்சிறப்பாங்களிசெருக்கொடுகுழம்பு
மதுகமேயிருப்பையெட்டிமதுரமாந்தராவுமாமே
சிதடனந்தகன்மூடன்பேர்திதிபக்கநிலைபேறும்பேர். (௨)

ஆதனுருயிரோர்வில்லானங்கியென்பதுநீச்சட்டை
போதகம்யானைக்கன்றுபோற்றியவிளமைக்கும்பேர்
ஏதந்துன்பங்குற்றப்பேரீமமேமயானங்காட்டம்
சூதன்றேர்ப்பாகன்சூதன்சுவேதமேவெயர்வுவெண்மை. (௩)

சூதமாமரமேவண்டேரூதுடனிரதந்தோன்றல்
சூதகமேயாசௌசந்தோகைமார்தோயாப்பூப்பாம்
பூதமாவிறந்தகாலம்புனிதமைம்பூதஞ்சீவன்
மாதவந்தவம்வசந்தம்வாதமேதருக்கங்காற்றும். (௪)

மதன்வலிவேள்வனப்பாம்வலித்தலேவலைத்தல்பேசல்
பதங்கம்புட்பொதுவிட்டிற்பேர்பலிபூசைபிச்சைசோறும்
சிதம்விண்மீன்ஞானம்வெள்ளைசெயமுறப்பட்டதாமே
நிதம்பமேயல்குலென்பநேமிமலைப்பக்கமும்பேர். (௫)

அண்டசமென்பது—முதலை, ஓந்தி, அரணை, பறவை, உடும்பு, பல்லி, நண்டு, மீன், தவளை, ஆமை, பாம்பு, இப்பி. கஉ.
சண்டன்—இயமன், பேடி, சூரியன். ௩. தாள்-கதவுறுதாள், பாதம்.
சண்டை—சுண்டைச்செடி, கள், உ. சொர்க்கம்-தேவலோகம், முலை.

பணம்—பாம்பின்படம், பாம்பு, பொற்காசு. ௩. மணம்—வாசனை, கூட்டம், விவாகம். ௩.
பணவை—பரண், பேய். உ. பையுள்—அற்பம், நோய். உ.
நுணவை—எண்ணெய், மா. உ. நுணி—நுதி, நுட்பம். உ.

---

# தகரவெதுகை.

மதலையென்பது-கொன்றைமரம், மகன், மரக்கலம், கொடுங்கை, தூண் சிதலை—நோய், சீலைத்துணி, கறையான். ௩.
சீதம்-நீர், குளிர்ச்சி, மேகம், ௩. பதலை-ஒருகட்பகுவாய்ப்பறை, மலை, சாடி. ௩. கதலி-வாழை, தேற்றுமரம், காற்றாடி, விருதுக்கொடி.

இதழ்—பனையேடு, பூவிதழ், உதடு. ௩. கதழ்வு—விரைவு, சிறப்பு.
களி—களிப்பு, குழம்பு. உ மதுகம்—இருப்பைமரம், எட்டிமரம், அதிமதுரம், தரா *. ச. சிதடன்—குருடன், மூடன். உ.
திதி—பிரதமைமுதலியதிதி, நிலைபெறுதல். உ.

ஆதன்—உயிர், அறிவிலான். உ. அங்கி—நெருப்பு, சட்டை. உ.
போதகம்—யானைக்கன்று, இளமை. உ.
ஏதம்—துன்பம், குற்றம். உ. ஈமம்—சுடுகாடு, விறகு. உ.
சூதன்—தேர்ப்பாகன், சூதாடுவோன். உ. சுவேதம்—வேர்வு, வெண்மை. உ.

சூதம்—மாமரம், வண்டு, சூது, இரசம், பிறப்பு. ரு.
சூதகம்—ஆசௌசம், பூப்பு. உ.
பூதம்—ஆலமரம், இறந்தகாலம், சுத்தம், ஐம்பூதம், உயிர். ரு.
மாதவம்—தவம், வசந்தகாலம். உ. வாதம்—தருக்கம், காற்று. உ.

மதன்—வலிமை, மன்மதன், அழகு. ௩. வலித்தல்—வளைத்தல், பேசல்.
பதங்கம்-பறவைப்பொது, விட்டிற்பறவை. உ. பலி-பூசை, பிச்சை, நீறு
சிதம்—நட்சத்திரம், ஞானம், வெண்மை, வெற்றிகொள்ளப்பட்டது.
நிதம்பம்—அல்குல், மலைப்பக்கம். உ.

* தரா - பொன்முதலிய ஏழுலோகங்களுளொன்று.

சதியுரோகிணிகற்பாட்டிவஞ்சனைதாளவொற்று
விதியென்பவினையயன்பேர்வேட்டுவன்மகாள்வேடன்
பதியிறைகேள்வனூராம்பதுக்கையேபாறைதூறு
பிதிர்கதைகொடிதூவற்பேர்பிண்டமேதிரளைபிச்சை. (௬)

ஆதியேமுதனேரேடலருகன்மாலீசன்வேதன்
பூதியம்புவியுடற்பேர்பொம்மலேபொலிவுஞ்சோறும்
பாதிரிபாடலப்பேர்பணைத்தெழுமூங்கிற்கும்பேர்
ஏதியாயுதம்வாளென்பவிழைநூலாபரணமாமே. (௭)

சாதியேபிரம்புகள்ளோர்தருசிறுசண்பகப்பேர்
போதஞானந்தோணிப்பேர்புகல்குதிருடல்சொல்வெற்றி
ஓதிபெண்மயிரேபூனையோந்திமெய்ஞ்ஞானம்வெற்பாம்
ஓதிமமன்னம்வெற்பாமுருத்தலேதோற்றல்கோபம். (௮)

சுதைமகள்கறவாத்தேனுசுண்ணச்சாந்தமுதுநாற்பேர்
புதையென்பகணையின்கட்டும்புதைமையுமறைவுமுப்பேர்
மதுவென்பநறவுந்தேனும்வசந்தகாலமுமாமென்ப
கதைதண்டாயுதமேவார்த்தைகாரணமிம்முப்பேரே. (௯)

சீதையேபொன்னாங்காணிபடைச்சால்சீராமன்றேவி
மேதைதோல்புதனிறைச்சியிக்கபேரறிவுகள்ளாம்
கோதைமுன்கைத்தோற்கட்டிகுழலூர்காற்றொழுங்குசேரன்
ஓதைபேரொலிமதிற்பேருக்கந்தியிடையானேறு. (௧௦)

அத்தம்பொன்பாதிகைகண்ணாடிசொற்பொருள்காடோர்நாள்
புத்தகங்கோசமென்பசித்திரப்படாமுமாமே
நத்தமேயிருளுமூருநந்துடனிரவுநாற்பேர்
துத்தமோரிசைநாய்பாலேவயிறுகண்மருந்துஞ்சொல்லும். (௧௧)

அத்தென்பவரைஞாண்செம்மையசைச்சொலோடிசைப்புநாற்பேர்
தொத்துப்பூங்கொத்துத்தொண்டாந்தும்புவேய்துளைமரக்கால்
தத்தைமூத்தாள்கிளிக்காந்தழல்கிளிகடிகோல்செந்தீ
உத்தரமூழித்தீமேலொடுமேறுமொழிவடக்காம். (௧௨)

கூத்தனேயுயிர்கடன்பேர்குலங்குடிகோயில்கூட்டம்
ஊழ்த்தலேகிளைத்தல்செவ்வியுறுபதனழிவுமுப்பேர்
பாத்தென்பகஞ்சிசோறுபகுத்திடல்வகுத்தமுப்பேர்
தீர்த்தமேவிழாவுசீருந்தீர்த்தனேயருகனாசான். (௧௩)

சதியென்பது—உரோகிணிநட்சத்திரம், கற்புடையாள், வஞ்சனை,
தாளவொற்று. ச.
விதி-செய்தொழில்,பிரமன்.உ.வேட்டுவன்-மகநட்சத்திரம்,வேடன்
பதி—அரசன், நாயகன், ஊர். ௩. பதுக்கை—பாறை, சிறுதூறு.உ.
பிதிர்—கதை, கைநொடி, தூவல். ௩. பிண்டம்—திரட்சி, பிச்சை.

ஆதி—முதல், நேரோடல், அருகன், திருமால், சிவன், பிரமன். ௬.
பூதியம்—பூமி, சரீரம். உ. பொம்மல்—பொலிவு, சோறு. உ.
பாதிரி—பாதிரிமரம், மூங்கில். உ. ஏதி—ஆயுதம், வாள். உ.
இழை—நூல், ஆபரணம். உ.

சாதி—பிரம்பு, கள், தேக்கமரம், சிறுசண்பகம். ச.
போதம்—ஞானம், மரக்கலம். உ. புகல்—குதிர், சரீரம், சொல்,
வெற்றி. ச. ஓதி—பெண்மயிர், பூனை, ஓந்தி, ஞானம், மலை.
ஓதிமம்—அன்னப்புள், மலை. உ. உருத்தல்—முனைத்தல், கோபம்.

சுதை—மகள், உதைகாற்பசு, சுண்ணச்சாந்து, அமிர்தம். ச.
புதை—அம்புக்கட்டு, புதுமை, மறைவு. ௩.
மது—கள், தேன், வசந்தகாலம். ௩.
கதை—தண்டாயுதம், சொல், காரணம். ௩.

சீதை—பொன்னூங்காணி, உழுபடைச்சால், சீதை. ௩.
மேதை—தோல், புதன், இறைச்சி, பேரறிவு, கள். ரு.
கோதை—கைக்கட்டி, கூந்தல், பூமாலை, காற்று, ஒழுங்கு, சேரன்.
ஓதை—பேரொலி, மதில். உ. உக்கம்—நெருப்பு, இடை, பசு,எருது.

அத்தம்—பொன், பாதி, கை, கண்ணாடி, சொற்பொருள், காடு,
ஒருநட்சத்திரம். எ. புத்தகம்—புத்தகம், சித்திரப்படாம். உ.
நத்தம்—இருள், ஊர், சங்கு, இராத்திரி. ச.
துத்தம்—ஏழிசையுளொன்று, நாய், பால், வயிறு, கண்மருந்து. ரு.

அத்து—அரைஞாண், சிவப்பு, அசைச்சொல், கூடிநிற்றல். ச.
தொத்து—பூங்கொத்து, அடிமை. உ. தூம்பு—மூங்கில், உட்டுளை,
மரக்கால். ௩.
தத்தை—முன்பிறந்தாள், கிளி. உ. தழல்—கிளிகடிகோல்,நெருப்பு.
உத்தரம்—வடவாமுகாக்கினி, மேல், எதிர்மொழி, வடக்கு. ச.

கூத்தன்—உயிர், நாடகன். உ. குலம்—சாதி,அரசரில்,கூட்டம்.௩.
ஊழ்த்தல்—நினைத்தல், பருவம், பதனழிவு. ௩.
பாத்து—கஞ்சி, சோறு, பகுத்திடல். ௩.
தீர்த்தம்—திருவிழா, நீர். உ. தீர்த்தன்—அருகன், குரு. உ.

சூத்திமண்டைக்கமென்பகோணம்வாள்குதிரைமூக்காம்
பத்தியேமுறையொழுக்கம்பகர்வழிபாடுமுப்பேர்
அத்தியார்கலியேயானையதவெலும்பாகநாற்பேர்
சத்தியஞ்சபதமெய்யாந்தபுதலேசாவுங்கேடும். (௧௪)

பித்திலைகருமுலைக்குப்பெயர்சுவர்த்தலமுமாகும்
கத்திகைதொடைவிகற்பந்துவச்மேகமழ்வாசந்தி
உத்திசெந்திருவுறுப்புச்சுணங்குரையாடன்முப்பேர்
இத்தியேசுணங்குபாம்பின்சுடர்ப்பொறிபுதலொன்றுமே. (௧௫)

சித்திரபானுசெந்தீதிவாகரனண்டொன்றின்பேர்
பத்திரமிலைவனப்புப்படைநன்மைசிறகேபாணம்
சித்திரமழகோர்பாடல்சிறந்தவிம்மிதமேரண்டம்
சத்திரங்குடையேயன்னசாலைகைவிடாவேல்வேள்வி. (௧௬)

காத்திரங்கனமெய்சீற்றங்களிற்றின்முன்காலேகீரி
கேத்திரங்கண்பட்டாடைநீலியேகருமைதுர்க்கை
கோத்திரம்புடவிதானேகுலமொடுமலையுமாமே
பாத்தியேசிறுசெய்யில்லம்பகுத்தலும்வகுத்தனாமம். (௧௭)

சதமிலையிறகுநூறுசத்தமேயோசையேழாம்
கதவமேகதவுகாப்பாங்கழங்குபேய்நடங்கழற்சி
பதமூரலின்பஞ்செவ்விபதவிதாள்வரிசைவார்த்தை
மதியேமுன்னிலையசைச்சொன்மாதமம்புலிபுத்திப்பேர். (௧௮)

பீதகஞ்சாந்துபொன்மைபெருந்தனமிருவேலிப்பேர்
சாதகம்வானம்பாடிசனனம்பாரிடமுப்பேரே
சேதகஞ்சேறுசெம்மைதேயந்தானுடம்புநாடாம்
மாதரேயிடைச்சொல்காதல்வனப்பொடுமகளிராமே. (௧௯)

சோதிமாலருக்கன்பானுசுடர்விளக்கீசனோர்நாள்
பூதியேநரகஞ்செல்வந்துர்க்கந்தம்புழுதிநீறும்
வீதியேதெருநேரோடன்மேலென்பதிடம்விண்மேற்காம்
மாதிரந்திசையாகாயமலையானைநிலமைம்பேரே. (௨0)

தாதுபொன்முதலாமேழுஞ்சடமுறுதாதேர்ரேழும்
பூதமோரைந்துங்காவிக்கல்லுடன்புகலுநாற்பேர்
வேதிகைபலகைதிண்ணைவெதிரென்பசெவிடுவேணு
கேதுவேசிவிபதாகைவின்னதான்குதிரைதத்தை. (௨௧)

குத்தியென்பது--மண்,அடக்கம்.உ.கோணம்-வாள்,குதிரைமூக்கு.உ.
பத்தி—முறைமை, ஒழுக்கம், வழிபாடு. ங.
அத்தி—சமுத்திரம், யானை, அத்திமரம், எலும்பு. ச.
சத்தியம்—சபதம், உண்மை. உ. தபுதல்—சாதல், கெடுதல். உ.

பித்திகை—கருமுகை, சுவர்த்தலம். உ.
கத்திகை—மாலைவிகற்பம், துகிற்கொடி, குருக்கத்தி. ங.
உத்தி—சீதேவியென்னுந்தலைக்கோலம், தேமல், சொல்லுதல். ங.
துத்தி—தேமல், பாம்பின்படப்பொறி, ஓர்செடி. ங.

சித்திரபானு—நெருப்பு, சூரியன், ஓர்வருடம். ங.
பத்திரம்—இலை, அழகு, ஆயுதம், நன்மை, இறகு, அம்பு. சு.
சித்திரம்—அழகு, ஒருகவி, அதிசயம், ஆமணக்கு. ச.
சத்திரம்—குடை, அன்னசாலை, கைவிடாப்படை, யாகம். ச.

காத்திரம்—கனம், உடம்பு, கோபம், யானைமுன்கால், கிரி. ரு.
நேத்திரம்—கண், பட்டுவஸ்திரம். உ. கிலி—கறுப்பு, தூர்க்கை. உ.
கோத்திரம்—பூமி, குலம், மலை. ங.
பாத்தி—சிறுசெய், வீடு, பகுத்தல். ங.

சதம்—இலை, இறகு, நூறு. ங. சத்தம்—ஒலி, ஏழு. உ.
கதவம்—கதவு, காவல். உ. கழங்கு—வெறியாட்டு, கழற்காய். உ.
பதம்—சோறு, இன்பம், காலம், வழி, கால், வரிசை, சொல். எ.
மதி—முன்னிலையசைச்சொல், மாதம், சந்திரன், புத்தி. ச.

பீதகம்—நால்வகைச்சாந்திலொன்று, பொன்னிறம், பொன், வெட்டிவேர். ச.
சாதகம்—வானம்பாடி, பிறப்பு, பூதம். ங.
சேதகம்—சேறு, சிவப்பு. உ. தேயம்—சரீரம், நாடு. உ.
மாதர்—இடைச்சொல், ஆசை, அழகு, பெண்கள். ச.

சோதி—திருமால், அருகன், சூரியன், ஒளி, தீபம், சிவன், ஒருநட்சத்திரம். எ.
பூதி—நரகம், செல்வம், துக்கந்தம், புழுதி, விபூதி. ரு.
வீதி—தெரு, நேரோடல். உ. மேல்—இடம், ஆகாயம், மேற்கு. ங.
மாதிரம்—திக்கு, ஆகாயம், மலை, யானை, பூமி. ரு.

தாது—பொன்முதலியவெழுவகைலோகம், இரதமுதலியவெழுவகைத்தாது, மண்முதலியவைவகைப்பூதம், காவிக்கல். ச.
வேதிகை—கேடகம், திண்ணை. உ. வெதிர்—செவிடு, மூங்கில். உ.
கேது—ஓர்கோள், துகிற்கொடி. உ. கின்னரம்—குதிரை, கிளி. உ.

கதுப்பேயாண்மயிரும்பெண்பான்மயிரொடுகேவுளுமுப்பேர்
விதப்பேகம்பிதமிக்காகும்வித்தம்பொன்பழிப்புஞானம்
அதிர்ப்பொலிகடுக்கமென்பவகப்பாவேபுரிசைமேடை
ஓதுக்கமேகடைமறைப்பாமொருத்தலாண்விலங்குவேழம். (௨௨)

பத்திரிபறவைகாளிபரியிலைபாணமைம்பேர்
அத்திரிகழுதைவிண்ணொட்டகம்பரியசலமம்பாம்
சத்தியேயுமைவேல்காண்றல்குடைவலிதுவசந்தானும்
சுத்தியேயகல்வெண்சங்குஞ்சுத்தமோர்கருவிக்கும்பேர். (௨௩)

புத்தன்மாலருகன்சாத்தன்பூழிறுணலில்பூமிப்பேர்
புத்தேளேபுதுமைதேவாம்பூட்கைதோள்மேற்கோள்யாளி
தைத்தறுன்னங்கைத்தற்பேர்சாறுகள்விழவுதாறும்
முத்தமேபிரியமோட்டமருதநன்னிலமுத்தாமே. (௨௪)

அத்தனேமூத்தோன்றந்தையரனொடுகுருவுநாற்பேர்
சித்தமேதிடமுள்ளப்பேர்சேகரந்தலைமாவேராம்
கைத்தலேசினங்கைப்பாகுங்களுறலேபொலிவுகன்றல்
சித்தென்பசயமேஞானஞ்செய்யென்பநிலமேவற்பேர். (௨௫)

உத்திரஞ்சித்திரஞ்சேர்ந்தொளிருமில்லூறப்போடோர்நாள்
பைத்தலேமுனிவிஞ்ஞுபெசுத்தலும்பகரலாகும்
மத்திகையேசம்மட்டிசுடர்நிலைத்தண்டுமாலை
மத்தென்பதயிர்மத்தோடுமத்தமுமிருபேராமே. (௨௬)

மதர்வுமேவுதல்வனப்புவலியிடமிகுதியைம்பேர்
புதவென்பகதவோர்புல்லாம்புணர்ச்சியேகலவிகூடல்
சிதருறிதிவலைவண்டுசீலையின்றுணிநாற்பேரே
அதர்வழிபுழுதியாட்டிணதருநன்மணலுமாமே. (௨௭)

முதலைசெங்கிடையிடங்கர்முருந்தெனமொழியலாகும்
அதமிறங்குதல்பாதாளங்கீழமென்றறையுமுப்பேர்
கதிகடைவிரைவேகான்குகதியொடுகதியுங்காட்டும்
மதமிபமதஞ்செருக்காமாளையேமாயஞ்சத்தி. (௨௮)

பீதமேசாந்துமஞ்சள்பிங்கலத்தொடுபொன்மைப்பேர்
பேதையோர்பருவமூடன்பெண்டரித்திரனோநாற்பேர்
வாதுவர்யானைப்பாகர்வயப்பரிமாவடிப்போர்
சூதிலரயாதிரைப்பேர்முக்கணன்பேருமாமே. (௨௯)

கதுப்பென்பது—ஆண்மயிர், பெண்மயிர், கபோலம். ௩. விதப்பு—நடுக்கம், மிகுதி. ௨.
வித்தம்—பொன், பழிப்பு, ஞானம்.௩. அதிர்ப்பு—ஒலி, நடுக்கம். ௨.
அகப்பா—மதில், மதிலுண்மேடை. ௨. ஒதுக்கம்—நடை, மறைப்பு.
ஒருத்தல்—ஆண்விலங்கு, யானை. ௨.

பத்திரி—பறவை, காளி, குதிரை, இலை, அம்பு. ௫.
அத்திரி—கழுதை, ஆகாயம், ஒட்டகம், குதிரை, மலை, பாணம். ௬.
சத்தி—உமை, வேலாயுதம், *வாந்தி, குடை, வலிமை, துகிற்கொடி.
சுத்தி—இகல், சங்கு, சுத்தம், ஒருகருவி. ௪.

புத்தன்—திருமால், அருகன், புத்தன். ௩. பூழில்—அகில், பூமி.௨.
புத்தேள்—புதுமை, தெய்வம். ௨. பூட்கை—யானை, மேற்கோள், யானையாளி. ௩.
தைத்தல்—தைத்தல், அலங்கரித்தல்.௨.சாறு—கள்,உற்சவம்,குலை.
முத்தம்—பிரீதி, உதடு, மருதநிலம், முத்து. ௪.

அத்தன்—மூத்தோன், பிதா, சிவன், குரு.௪. சித்தம்--மெய், மனம்.
சேகரம்—தலை, மாமரம், அழகு. ௩.
கைத்தல்—கோபம், கசப்பு. ௨. கஞறல்—பொலிவு, சினக்குறிப்பு.
சித்து—வெற்றி, ஞானம், ௨. செய்—விளைநிலம், செய்யெனேவல்.

உத்திரம்—வீட்டினுறுப்பாகியவுத்திரம்,ஒருநட்சத்திரம். ௨.
பைத்தல்—கோபம், பசுமை. ௨.
மத்திகை—குதிரைச்சம்மட்டி, விளக்குத்தண்டு, மாலை. ௩.
மத்து—தயிர்முதலியகடையுமத்து, ஊமத்தை. ௨.

மதர்வு—உள்ளக்களிப்பு, அழகு, வலிமை, இடம், மிகுதி. ௫.
புதவு—கதவு, ஒருவகைப்புல். ௨. புணர்ச்சி—கலவி, இசைப்பு. ௨.
சிதர்—உறி, துவளி, வண்டு, சீலைத்துணி. ௪.
அதர்—வழி, புழுதி, ஆட்டினதர், நுண்மணல். ௪.

முதலை—செங்கிடை, முதலை, இறகினடிக்குருத்து. ௩.
அதம்—இரங்குதல், பாதலம், கீழ். ௩.
கதி—நடை, வேகம், தேவகதிமுதலியநாற்கதி, முத்தி. ௪.
மதம்—யானைமதம், செருக்கு. ௨. மாயை—வஞ்சனை, சத்தி. ௨.

பீதம்—நால்வகைச்சாந்திலொன்று, மஞ்சள்,பொன்,பொன்னிறம்.
பேதை—பேதைப்பருவம், அறிவிலான், பெண், வறியவன். ௪.
வாதுவர்—யானைப்பாகர், குதிரைப்பாகர். ௨.
மூதிரை—திருவாதிரைநட்சத்திரம், சிவன். ௨.

---

* சாந்தி - வாந்தி.

தாதியேபரணிகாளுமடிமையுமிருபேர்சாற்றும்
போதுதான்காலம்பூவாம்போர்வைதோல்கவசமீக்கோள்
சாதமேதிடம்பதப்பேர்தகைமையேபரியல்புபீடாம்
வீதலேகெடுதல்சாவேயிலம்பாடும்விளம்புமுப்பேர். (௧௦)

தகரவெதுகை முற்றிற்று.

ஆ விருத்தம் - ௧௨௪.

# நகரவெதுகை.

இந்தனமிசையேகாட்டமெரியிடுகனலுமாகும்
சந்தமேநிறம்வனப்புச்சாற்றியகவிதைசாந்தம்
கந்தமிந்தியம்பகுத்தல்கழுத்தடிகிழங்குநாற்றம்
மந்திரம்விசாரங்கோயில்வாசியின்குழாம்வீடேகன். (௧)

அந்திலாங்கசையிடப்பேரணவலேயணுகல்புல்லல்
சந்தியேயந்திமூங்கில்சதுக்கமுமிசைப்புமப்பேர்
நந்தியேசிவனுமேறுநந்தியீச்சுரனுமுப்பேர்
உந்திதேருருளேயாறேயுவரிநீர்ச்சுழியேகொப்பூழ். (௨)

கந்துபண்டியுளிருப்புங்கம்பமும்யாக்கைமூட்டும்
கந்துகங்குதிரைபந்தாங்கனமென்பபுயல்பாரப்பேர்
பந்துகந்துகமுமட்டுப்படர்நீர்துந்துருத்தியும்பேர்
குந்தளமாதரோதிகுழற்கொத்துக்குருளுமுப்பேர். (௩)

வேந்தனேயரசன்றிங்கள்வியாழனிந்திரனுநித்தன்
காந்தாரமிசைகாடென்பகாழகங்கருமைதுசாம்
ஏந்தலேபெருமைமேடாமெஃகுருக்கொடுவேல்கூர்மை
கூந்தல்பெண்மயிர்பீலிப்பேர்குவலயங்குவனிபூமி. (௪)

அந்தரமுடிவுபேதமண்டமோடிடநாற்பேரே
கந்தரமென்பமேகங்கழுத்தொடுமலைமுழைப்பேர்
மந்தாரந்தருமாஞ்செவ்வரத்தமுமாகுமென்ப
சிந்தூரம்புளிமாயானைசெங்குடைதிலகஞ்செம்மை. (௫)

கந்தருவம்பண்வாசிகவந்தமென்பதுநீர்மட்டை
குந்தமேயொருவியாதிகுருந்தொடுகுதிரைகைவேல்
செந்துவே.ர்கரகமோரிசைவேறுடனுவுகாற்பேர்
சிந்துநீர்மூச்சிராறுகடல்குறளொருதேசப்பேர். (௬)

தாதியென்பது—பரணிநட்சத்திரம், அடிமை. ௨. போது—
காலம், பூ. ௨.
போர்வை—தோல், மெய்க்கவசம், மேற்போர்வை. ௩.
சாதம்—உண்மை, சோறு. ௨. தகைமை—அழகு,குணம்,பெருமை.
வீதல்—கெடுதல், சாதல், வறுமையெய்தல். ௩.

---

# நகரவெதுகை.

---

இந்தனமென்பது—மேல், விறகு, அக்கினிச்சுவாலை. ௩.
சந்தம்—நிறம், அழகு, கவிதை, சந்தனம். ௪.
கந்தம்—இந்திரியம், பங்கிடல், கழுத்தடி, கிழங்கு, மணம். ௫
மந்திரம்—ஆலோசனை, தேவர்கோயில், குதிரைக்கூட்டம்,வீடு,கள்.
அந்தில் என்பதும் ஆங்கு என்பதும் அசைச்சொல், இடம். ௨.
அணவல்—கிட்டல், புணர்தல். ௨.
சந்தி—மாலைக்காலம், மூங்கில், நாற்சந்தி, இசைப்பு. ௪.
நந்தி—சிவன், இடபம், நந்திதேவன். ௩. உந்தி—தேருருள்,ஆறு,
கடல், நீர்ச்சுழி, கொப்பூழ். ௫.
கந்து—பண்டியுள்ளிரும்பு, தூண்,சந்து.௩.கந்துகம்—குதிரை,பந்து.
கனம்—மேகம், பாரம். ௨. பந்து—எறியும்பந்து,மட்டத்துருத்தி.௨.
குந்தளம்—பெண்மயிர், மயிர்க்குழற்சி, நரி நாய் பன்றி புலி மான்
முசு முயல் யாளி இவற்றின்குட்டி. ௩.
வேந்தன்—அரசன், சந்திரன், வியாழன், இந்திரன், சூரியன். ௫.
காந்தாரம்—ஓரிசை, காடு. ௨. காழகம்—கறுப்பு, சீலை. ௨.
ஏந்தல்—பெருமை,மேடு. ௨. எஃகு—உருக்கு,வேலாயுதம்,கூர்மை.
கூந்தல்—பெண்மயிர், மயிற்பீலி. ௨. குவலயம்—குவளை, பூமி. ௨.
அந்தரம்—முடிவு, பேதம், ஆகாயம், இடம். ௪.
கந்தரம்—மேகம், கழுத்து, மலைமுழை. ௩.
மந்தாரம்—ஐந்தருவிலொன்று, செவ்வரத்தம். ௨.
சிந்தூரம்—புளிமா, யானை, சிவப்புக்குடை, பொட்டு, சிவப்பு. ௫.
கந்தருவம்—இசை, குதிரை. ௨. கவந்தம்—நீர், உடற்குறை. ௨.
குந்தம்—ஓர்நோய், குருந்தமரம், குதிரை, கைவேல். ௪.
செந்து—ஒருநரகம், கிழநரி, உயிர், அணு. ௪.
சிந்து—நீர், முச்சீரடி, ஆறு, கடல், குறள், ஓர்தேசம். ௬.

அந்திமுச்சந்திபாலையாழ்சைபிரவுமாலை
நந்தென்பகத்தைசங்காநாறுதன்மணமுண்டாதல்
மைந்தனேதிறலோன்சேயாம்வசந்தமேவேனில்வாசம்
வந்தியர்புகழ்வோர்பேருமலடிகள்பேருமாமே. (௭)

விந்தமோரெண்ணும்வெற்பும்விருத்தமேவட்டமும்பாம்
அந்தணரறவோர்பார்ப்பாரணிபடைவகுப்பணிப்பேர்
அந்தகன்குருடன்கூற்றுமங்காரகன்றீச்செவ்வாய்
மந்தனேசனிகூர்ப்பில்லாமனுடனுமிருபேராமே. (அ)

நகரவெதுகை முற்றிற்று.

ஆ விருத்தம் - ௧௧௨.

---

# பகரவெதுகை.

உப்புமெல்லியலாராடலுவர்கடலினிமைநாற்பேர்
செப்பமோநகிலைப்பேர்தெருவொடுநெஞ்சுமாகும்
துப்பரக்கூற்றந்தூய்மைதுகிர்பகையனுபவப்பேர்
கப்பணமிரும்பிற்செய்தநெரிஞ்சின்முட்கைவேலாமே. (௧)

தாபரமலைபோனிற்றல்சடமொடுதருவும்முப்பேர்
நீபமுத்தராட்டாதிப்பேர்நிமித்தநீர்க்கடம்புமாகும்
யூபமேகவந்தம்வேள்விக்குறுதம்பம்படைவகுப்பாம்
சாபமேசபித்தல்வில்லாந்தளிமமேயழகுமெத்தை. (௨)

சிப்பென்பகதவிற்றுழுஞ்சிவுகங்கமுமாமென்ப
நாப்பணென்பதுதேர்த்தட்டுநடுவும்யாழுறுப்புமுப்பேர்
காப்பென்பகாவலோடுகதவும்வெண்ணீறுமாகும்
யாப்பென்பகவிதைகட்டாமிருபேறென்கூடெருதுமீனே. (௩)

பகரவெதுகை முற்றிற்று.

ஆ விருத்தம் - ௧௧௫.

அந்தியென்பது—முச்சந்தி, பாலையாழிசை, இரா, மாலைக்காலம். ௪.
நந்து—நத்தை, சங்கு. ௨. நாறுதல்—மணத்தல், உண்டாதல். ௨.
மைந்தன்—திண்ணியன், மகன். ௨. வசந்தம்—இளவேனில், வாசனை.
வந்தியர்—புகழ்வோர், மலடிகள். ௨.

விந்தம்—ஓரெண், மலை. ௨. விருத்தம்—வட்டம், மூப்பு. ௨.
அந்தணர்—முனிவர், பார்ப்பார். ௨. அணி—படைவகுப்பு, ஆபரணம்.
அந்தகன்—குருடன், யமன். ௨. அங்காரகன்—நெருப்பு, செவ்வாய்.
மந்தன்—சனி, கூர்மையில்லான். ௨.

---

# பகரவெதுகை.

உப்பென்பது—மகளிர்விளையாட்டு, உவர், கடல், தித்திப்பு. ௪.
செப்பம்—நடுநிலை, வீதி, மார்பு. ௩.
துப்பு—அரக்கு, வலி, சுத்தம், பவளம், பகை, அனுபவம். ௬.
கப்பணம்—இரும்பினியற்றியநெரிஞ்சின்முள், கைவேல். ௨.

தாபரம்—மலைபோனிற்றல், உடம்பு, மரப்பொது. ௩.
நீபம்—உத்தரட்டாதி, காரணம் *, நீர்க்கடம்பு. ௩.
யூபம்—உடற்குறை, வேள்வித்தூண், படைவகுப்பு. ௩.
சாபம்—சபித்தல், வில். ௨. தளிமம்—அழகு, மெத்தை. ௨.

சிப்பு—கதவிடுதாழ், சிப்பு. ௨. நாப்பண்—தேர்த்தட்டு, நடு, யாழிறுப்பு. ௩.
காப்பு—காவல், கதவு, திருநீறு. ௩.
யாப்பு—பாட்டு, கட்டு. ௨.
இறால்—தேன்கூடு, எருது, ஓர்மீன். ௨.

---

* நீபம் - காரணம்.

# மகரவெதுகை.



சமன்யமனடுவுமாகுஞ்சலமென்பவயிரநீர்பொய்
கமலநீர்வனசமும்பேர்கலாஞ்சினங்கொடுமையாகும்
குமரிகற்றாழைகன்னிகொற்றவைகாளிக்கும்பேர்
ஞமலிநாய்மயில்கள்ளென்பநனைகள்ளுமலர்மொட்டும்பேர். (௧)

சாமமோர்வேதம்பச்சைசாமமேகருமைநாற்பேர்
வாமமேகுறளிடப்பால்வனப்பொடுதொடையுமாமே
பூமலர்வனப்புக்கூர்மைபொலிவொடுபிறப்புப்பூமி
ஏமமேசேமங்காவலின்பம்பொன்னிரவேமையல். (௨)

உம்பரேதேவராகுமுயர்கிலமுடன்மேலும்பேர்
வம்பென்பபுதுமைகச்சுமணநிலையின்மைநாற்பேர்
கும்பமேகுடமிராசிகும்பிமத்தகமுமாகும்
தும்பென்பசிம்புதோடாஞ்சுகமென்பகிளியேயின்பம். (௩)

ஆம்பல்வேய்கள்ளுக்கவ்வையல்லிவங்கியமேயானை
சாம்பல்கூம்புதல்பழம்பூத்தமிழென்பதினிமைநீர்மை
தாம்பென்பகயிறுதானேதாமணிதனக்கும்பேராம்
காம்புவேய்மலர்த்தாள்பட்டேகடிமலர்க்கொம்புநாற்பேர். (௪)

அம்மையேவருபிறப்புமழகுமாந்தாயுமாகும்
சும்மையென்பதுவேநெற்போர்நாடொலிசுமையுஞ்சொல்லும்
செம்மைசெவ்வையுஞ்சிவப்புந்திரிதலேயுலாவல்கேடாம்
கொம்மையேயிளமைவட்டங்கொங்கைகைகுவித்துக்கொட்டல். ()

அம்மழகசைச்சொனீராமழனந்தீபிணமுமாகும்
கம்மென்பதலையாகாயங்கனங்காணீர்விதிவெளுப்புச்
செம்மலேபழம்பூவீசன்சினேந்திரன்சிறந்தோன்மைந்தன்
கம்மியர்கைவினைப்பேர்கண்ணாளர்தாமுமாமே. (௬)

வாமனங்குறள்புராணமாதிரக்கயத்திலொன்றும்
காமரமத்தநாளோடடுப்பிசைப்பொதுவுங்காட்டும்
நேமிசக்கரம்பார்வட்டநேமிப்புட்கடலும்பேரே
தேமென்பதிடந்தித்திப்புத்தேனாற்றந்திசைதேசப்பேர். (௭)

தாமம்வெற்பொழுங்குகொன்றைசாந்தொளிகரந்தாம்பு
பூமணிக்கோவைமாலைபொருகளங்கரியீராறும்
சோமனோர்வன்னவிந்துசுரும்பென்பமலையும்வண்டும்
சாமியேமுதல்வன்செவ்வேடலைவியாசான்வெறுக்கை. (௮)

# மகரவெதுகை.



சமனென்பது—யமன், கடு. உ. சலம்—நெடுங்காலமாகநிகழுங்
கோபம், நீர், பொய். ௩.

கமலம்—நீர், தாமரை. உ. கலாம்—கோபம், கொடுமை. உ.

குமரி—கற்றாழை, கன்னி, துர்க்கை, காளி. ௪.

ஞமலி—நாய், மயில், கள். ௩. நறவு—கள், பூவரும்பு. உ.

சாமம்—ஓர்வேதம், பச்சை, யாமம், கருமை. ௪.

வாமம்—குறுமை, இடப்பக்கம், அழகு, தொடை. ௪.

பூ—மலர், அழகு, கூர்மை, பொலிவு, பிறப்பு, பூமி. ௬.

ஏமம்—புதையல், காவல், இன்பம், பொன், இரா, மயக்கம். ௬.

உம்பர்—தேவர், தேவலோகம், மேல். ௩.

வம்பு—புதுமை, கச்சு, மணம், நிலையின்மை. ௪.

கும்பம்—குடம், ஓரிராசி, யானைமத்தகம். ௩.

தும்பு—ஓர்கயிறு,பனைமுதலியவற்றினேடு.உ. சுகம்—கிளி,இன்பம்.

ஆம்பல்—மூங்கில், கள், துன்பம், அல்லி,இன்னிசைக்குழல்,யானை

சாம்பல்—ஒடுங்குதல், பழம்பூ. உ. தமிழ்—இனிமை, குணம். உ.

தாம்பு—கயிறு, பசுக்கட்டுங்கயிறு. உ.

காம்பு—மூங்கில், பூவின்காம்பு, பட்டுவிகற்பம், மரக்கொம்பு. ௪.

அம்மை—வருபிறப்பு, அழகு, தாய். ௩.

சும்மை—நெற்போர், நாடு, ஒலி, சுமை. ௪.

செம்மை—செவ்வை, சிவப்பு. உ. திரிதல்—உலாவல், கேடு. உ.

கொம்மை—இளமை, வட்டம், முலை, குடங்கையைக்குவித்துக்கொ
ட்டல். ௪.

அம்—அழகு, அசைச்சொல், நீர். ௩. அழனம்—நெருப்பு,பிணம்.

கம்—தலை, ஆகாயம், மேகம், காற்று, நீர், பிரமன், வெண்மை. ௭.

செம்மல்—பழம்பூ, சிவன்,அருகன்,பெருமையிற்சிறந்தோன்,மகன்

கம்மியர்—தொழில்செய்வோர், கம்மாளர். உ.

வாமனம்—குறள், சிவபுராணத்துளொன்று, தென்றிசையானை.௩.

காமரம்—அத்தநட்சத்திரம், அடுப்பு, இசைப்பொது. ௩.

நேமி—சக்கராயுதம், பூமி, வட்டம், சக்கரவாகப்புள், சமுத்திரம்.௫.

தேம்—இடம், தித்திப்பு, தேன், வாசனை, திக்கு, தேசம். ௬.

தாமம்—மலை, ஒழுங்கு, கொன்றைமரம், சாந்து, ஒளி, ஊர், கயிறு,
பூ, மணிவடம், பூமாலை, போர்க்களம், யானை. கஉ.

சோமன்—ஓர்வள்ளல், சந்திரன். உ. சுரும்பு—மலை, வண்டு. உ.

சாமி—தலைவன், முருகக்கடவுள், தலைவி, குரு, பொன். ௫.

குமுதமேயடப்போர்திக்கின்குஞ்சரமொலிவெண்ணெய்தல்
சிமயமேமலைவெற்புச்சிதீத்தியேநரகுதீங்காம்
அமறலேபொலிவுதுன்னலரிறாறுபிணக்கமாசு
சிமிலியேகுடுமிசிக்கஞ்சிள்வீடுதானுமாமே. (௯)

சம்புவேயிரவிநாவல்சங்கரனயன்மாலோரி
தும்பியேகளிறுவண்டாந்துன்னலேசெறிதல்சேர்தல்
கம்புளேசங்குசம்பங்கோழியென்றிருபேர்காட்டும்
அம்பரங்கடல்விண்டுசோமண்ணலேதலைவன்பீடு. (௧௰)

இம்புரிமுடிதந்தப்பூண்கேட்டைதான்முகடியோர்நாள்
குய்ப்பிசேறூனைபூதிகுலைதான்செய்கரைகாய்க்கொத்தாம்
உம்பலாண்விலங்குவேழமுயர்குலமெழுச்சிக்கும்பேர்
அம்பலேபழிச்சொல்சில்லோரறிந்தலர்தூற்றலாமே. (௧௧)

கம்பலையச்சமோசைகம்பிதந்துன்பநாற்பேர்
செம்புலம்பாலைசேருந்திணைசெருக்களமிரண்டாம்
தம்பமேகவசந்தூணுஞ்சமழ்த்தலைவருத்தநாணம்
கம்பமேநடுக்கந்தம்பங்கந்தனேயருகன்செவ்வேள். (௧௨)

அமரரேவிபுதர்தெவ்வரவந்திதான்கிளியோரூராம்
அமுதுபாறேவருண்டியாகுமின்சுவையுமப்பேர்
அமலையேயாரவாரமயினியோடுமையுமுப்பேர்
தமிருளிராகுவின்பேர்சார்ங்கம்விற்பொதுமால்வில்லாம். (௧௩)

ஆம்பிரம்புளிமாதேமாவாம்புளிப்பினுக்குமப்பேர்
சாம்புபொன்பறையாமென்பதாண்டவங்கூத்தேதாவல்
பாம்பென்பகரைமராளம்பையராப்படமேபச்சை
ஆம்பியேயொலிகாளானுமயிராணியுமையிந்திராணி. (௧௪)

காமனேவாசலன்வேள்கழுதுந்திப்பலியுமாகும்
காமமேவிரகமாலைசகணிச்சிதால்மழுவேதோட்டி
பூமனேபிரமன்செவ்வாய்புரையோரேகீழோர்மேலோர்
சேமமேகாவலின்பந்தெக்கணம்வலந்தெற்காகும். (௧௫)

காமுகன்விடன்வேண்மாலாங்காதென்பகொலையுங்காதும்
கோமளம்பசுவனப்புக்கூறியவிளமைக்கும்பேர்
நாமமாங்கலித்தன்மிக்குறற்பொலிவெழுச்சியோசை
மாமையேநிறம்வனப்பாமலயசஞ்சந்தந்தென்றல். (௧௬)

மகரவெதுகை முற்றிற்று.

ஆகூ விருத்தம் - ௧௫௧.

குமுதமென்பது—அடுப்பு, மேற்றிசையானை, ஒலி,வெண்ணெய்தல்.
சிமயம்—மலை, மலையினுச்சி. ௨. தீ—நெருப்பு, நரகம், தீமை. ௩.
அமறல்--பொலிவு,நெருங்கல்.௨.அரில்--சிறுதூறு, பிணக்கு,குற்றம்.
சிமிலி—குடுமி, உறி, சிள்வண்டு. ௩.

சம்பு—சூரியன், நாவல், சிவன், பிரமன், திருமால், நரி. ௬.
தும்பி—யானை, வண்டு. ௨. துன்னல்—நெருங்கல், கிட்டல். ௨.
கம்புள்—சங்கு,சம்பங்கோழி.௨.அம்பரம்-கடல்,ஆகாயம்,வஸ்திரம்.
அண்ணல்—பெருமையிற்சிறந்தோன், பெருமை. ௨.

கிம்புரி—முடி, யானைக்கொம்பிற்பூண். ௨. கேட்டை—மூதேவி,ஒரு
நட்சத்திரம். ௨. கும்பி—சேறு, யானை, நரகம். ௩. குலை—
செய்கரை, கமுகு வாழைமுதலியவற்றின் காய்க்குலை. ௨.
உம்பல்—ஆண்விலங்கு, யானை, குலம், எழுச்சி. ௪.
அம்பல்—பழிச்சொல், சிலரறிந்துபுறங்கூறல். ௨.

கம்பலை—பயம், ஒலி, நடுக்கம், துன்பம் ௪.
செம்புலம்—பாலைநிலம், போர்க்களம். ௨. தம்பம்—கவசம், தூண்.
சமழ்த்தல்—வருத்தம், வெட்கம். ௨. கம்பம்—நடுக்கம், தூண். ௨.
கந்தன்—அருகன், முருகக்கடவுள். ௨.

அமரர்—தேவர், பகைவர்.* ௨. அவந்தி—கிளி, ஓரூர். ௨.
அமுது—பால், தேவருணவு, அமிர்தம். ௩.
அமலை—ஒலி, சோறு, பார்ப்பதி. ௩.
தமம்—இருள்,இராகு. ௨. சார்ங்கம்—விற்பொது, திருமால்வில்.௨.
ஆம்பிரம்—புளிமா, தேமா, புளிப்பு. ௩.
சாம்பு—பொன், பறை. ௨. தாண்டவம்—கூத்து, தாண்டுதல். ௨.
பாம்பு—கரை, பாம்பு. ௨. பை—பாம்பின்படம், பச்சை. ௨.
ஆம்பி—ஒலி, காளான். ௨. அயிராணி—பார்ப்பதி,இந்திராணி. ௨.
காமன்—இந்திரன், மன்மதன், வண்டு, திப்பலி. ௪.
காமம்—காமநோய், ஆசை. ௨. கணிச்சி—மழு, தோட்டி. ௨.
பூமன்—பிரமன்,செவ்வாய்.௨.புரையோர்--கீழ்மக்கள்,மேன்மக்கள்.
சேமம்—காவல், இன்பம். ௨. தெக்கணம்—வலப்பக்கம்,தெற்கு.௨.
காமுகன்—தூர்த்தன், மன்மதன், திருமால். ௩.
காது—கொலை, செவி. ௨. கோமளம்—பசு, அழகு, இளமை. ௩.
கலித்தல்—மிகுதி, பொலிவு, எழுச்சி, ஒலி. ௪.
மாமை—நிறம், அழகு. ௨. மலயசம்—சந்தனமரம், தென்றல்.௨.

---

* அமரார் - பகைவர்.

# யகரவெதுகை.



காயமெய்விண்வெண்காயம்பெருங்காயங்கறிகரித்தல்
கேயமெய்யெண்ணெயன்பாநிறமென்பமருமங்காந்தி
ஆயமேகவற்றிற்றாயமாதாயமாதர்கூட்டம்
சாயலென்பதுமேம்பாடுதெருமழகுடனேமென்மை. (௧)

வயநீர்புட்பொதுவலிப்பேர்வயல்வெளிபழனமும்பேர்
சயம்வெற்றிசருக்கரைப்பேர்சடமுடல்வஞ்சம்பொய்யாம்
நியமமேநியதிவீதிநிச்சயநகரங்கோயில்
இயமென்பவொலியேவார்த்தைவாச்சியமிம்முப்பேரே. (௨)

அயமென்பநீர்தடாகமாடுவெம்பரியிரும்பாம்
கயமென்மைகுளமேயாழங்களிறுகீழ்பெருமைதேய்வாம்
பயமென்பசுதைநீரச்சம்பாலொடுபயன்பேரைந்தே
அயனமேவழியினுமமாண்டினிற்பாதிக்கும்பேர். (௩)

பயிரொலிபயிலேபைங்கூழ்பறக்கும்புட்குரலிந்நாற்பேர்
கயினியேயத்தநாளுங்கைம்மையுமிருபேர்காட்டும்
வயிரமேசெற்றங்கூர்மைவச்சிரமோர்மணியேசேகு
கயில்பிடர்த்தலையேபூணின்கடைப்புணர்விருபேர்தானே. (௪)

ஐயமேபிச்சையேற்குமோடனுமானம்பிச்சை
ஐயனேமூத்தோன்சாத்தனப்பனீச்சுரனாற்பேரே
தொய்யலேயுழவுஞ்சேறுந்துயரமுமகிழ்ச்சியும்பேர்
மொய்செருக்களம்போர்யானைமூசல்வண்டொடுதிரட்பேர். (௫)

வயவனேவீரனோடுவலியான்காதலனுமாகும்
குயிறலேசெறிதல்கூவல்குடைதல்பண்ணுதனாற்பேரே
வயினிடமுதரம்வீடாம்வயாக்கருவருத்தங்காதல்
மயல்செத்தைமயக்கம்பேயாமறவரேவயவர்வேடர். (௬)

குயிலேகோகிலமுஞ்சொல்லுங்கொண்மூவுந்துளையுநாற்பேர்
வயமாவேகுதிரைசிங்கமதகரிபுலியுமாகும்
வியலென்பவிசாலம்பீடாம்வேய்துளையொற்றுமூங்கில்
மயிலையேமீனராசிமீனிருவாட்சிமுப்பேர். (௭)

சயிந்தவங்குதிரையோடுதலையுமிந்துப்புமாகும்
குயந்தனமிளமையோடுகூரரிவாளுமுப்பேர்
நயந்தோனேநண்பன்கொண்கனலம்விருச்சிகமேநன்மை
பயம்பென்பதானைவீழும்படுகுழிபள்ளமாமே. (௮)

# யகரவெதுகை.

காயமென்பது—உடல், ஆகாயம், வெண்காயம், பெருங்காயம், மிளகு, கார்ப்பு. ௬.
நேயம்—நெய், எண்ணெய், அன்பு. ௩. நிறம்—மார்பு, ஒளி. ௨.
ஆயம்—கவற்றிற்றாயம், இலாபம், பெண்கள்கூட்டம். ௩.
சாயல்—மேம்பாடு, அழகு, மென்றமை. ௩.
வயம்—நீர், பறவைப்பொது, வலிமை. ௩. வயல்—வெளி, வயல்.
சயம்—வெற்றி, சருக்கரை. ௨. சடம்—சரீரம், வஞ்சனை, பொய்.
நியமம்—செய்கடன், தெரு, நிச்சயம், நகரம், கோயில். ௫.
இயம்—ஒலி, சொல், வாச்சியப்பொது. ௩.
அயம்—நீர், குளம், ஆடு, குதிரை, இரும்பு. ௫.
கயம்—மென்மை, குளம், ஆழம், யானை, கீழ், பெருமை, தேய்வு.௭
பயம்—அமிர்தம், நீர், பயம், பால், பயன். ௫.
அயனம்—வழி, ஆண்டிற்பாதி. ௨.
பயிர்—ஒலி, பயில், பயிர், பறவைக்குரல். ௪.
கயினி—அத்தநட்சத்திரம், விதவை. ௨.
வயிரம்—நெடுங்காலநிகழுங்கோபம், கூர்மை, வச்சிராயுதம், வைரமணி, மரவயிரம். ௫. கயில்—பிடர், ஆபரணக்கடைப்புணர்வு. ௨.
ஐயம்—பிச்சையேற்குமட்கலம், சந்தேகம், பிச்சை. ௩.
ஐயன்—மூத்தோன், ஐயனார், பிதா, கடவுள். ௪.
தொய்யல்—*உழவு, *சேறு, துன்பம், களிப்பு. ௪.
மொய்—போர்க்களம், போர், யானை, மொய்த்தல், வண்டு, கூட்டம்
வயவன்—வீரன், வலியானென்னும்புள், தலைவன். ௩.
குயிறல்—நெருங்கல், அழைத்தல், துளைத்தல், செய்தல். ௪.
வயின்—இடம், வயிறு, வீடு. ௩. வயா—கருப்பம், வருத்தம், ஆசை
மயல்—சேத்தை, மயக்கம். பேய். ௩. மறவர்—படைவீரர், வேடர்.
குயில்—ஓர்பட்சி, வார்த்தை, † மேகம், துளை. ௪.
வயமா—குதிரை, சிங்கம், யானை, புலி. ௪.
வியல்—அகலம், பெருமை. ௨. வேய்—உட்பகை, ஒற்று, மூங்கில்.
மயிலை—மீனராசி, மீன், இருவாட்சி. ௩.
சயிந்தவம்—குதிரை, தலை, இந்துப்பு. ௩.
குயம்—முலை, இளமை, அரிவாள். ௩.
நயந்தோன்—தோழன், கணவன். ௨. நலம்—தேள், நன்மை. ௨.
பயம்பு—யானைபடுகுழி, பள்ளம். ௨.

---

* தொய்யல் - உழவு, சேறு. † குயின் - மேகம்.

இயனடைதமிழ்சாயற்பேரல்லவையேபொழுதுவாவி
குய்யென்பகறிகரித்தல்குளிர்நறும்புகையிரண்டாம்
செயிரென்பசினங்குற்றப்பேர்சேடிவிஞ்சையரூர்பாங்கி
உயவைகாக்கணமேமுல்லையுற்றகான்யாறுமாமே. (கூ)

செய்யலேயொழுக்கங்காவல்சேறுசெய்வினைநாற்பேரே
நெய்தலேகடற்சார்பூமிநெய்தற்பூச்சாபறைப்பேர்
வெய்யோனுதவனேதீயோன்விருப்பின்னற்றனக்குமப்பேர்
ஐயையேயுமையார்க்கைமகளருந்தவப்பெண்ணுசாள். (கO)

யூயழிலைடச்சொல்கோழையரசனேடிருமல்சாமி
மையென்பதஞ்சனங்கார்மலடிருளாடுமாசாம்
கையிடம்படையுறுப்பொப்பனைசெங்கைசிறுமைசீலம்
வையங்தேரேறுரோணிவசுந்தரைசிவிகையூர்தி. (கக)

செய்குகனிளமைதூரஞ்செம்மைசேண்சிறுவன்செவ்வாய்
வாய்குழலிடம்வாய்மைப்பேர்மாருதியனுமன்வீமன்
ஆய்தலேநுணுக்கந்தேர்தலாறென்பவழிநதிப்பேர்
வேய்தல்குடுதன்மூடற்பேர்விநாயகனருகன்முன்னேன். (கஉ)

அயிர்கரும்பின்றேங்கட்டியான்றநுண்மணலேநுண்மை
செயரெுழிலொழுக்கமென்பதெய்வமேகடவுளூழாம்
கயமென்பமகிழ்ச்சியின்பநன்மைநற்பயனுற்பேரே
பெயரென்பபெருமைகீர்த்திபேசுநாமப்பேராமே. (கங)

யகரவெதுகை முற்றிற்று.

ஆ விருத்தம் - கசுச.

# ரகரவெதுகை.

சிரகமேகரகமாகுஞ்சென்னியிற்சோடுமப்பேர்
கரகமேயாலங்கட்டிகமண்டலந்துளிநீர்கங்கை
மரபுதான்முறைமைதொன்மைமறலென்பபிணக்குங்கூற்றும்
சரபமெண்காற்புள்ளென்பவரையாடுதானுமாமே. (க)

இரதமேபுணர்ச்சிசூதமின்சுவையரைஞாண்பொற்றேர்
அரணமேகவசங்காடேயணிமதில்வேலிநாற்பேர்
கரணமென்மனநிகூத்துக்கலவிகாரணமைம்பேரே
சரணந்தாண்மறைபுகற்பேர்தன்னமான்கன்றேயற்பம். (உ)

இயலென்பது—ஒழுக்கம், இயற்றமிழ், சாயல்.௩. ஏல்வை—காலம், தடாகம். ௨.
குய்—தாளித்தல், நறும்புகை. ௨. செயிர்—கோபம், குற்றம். ௨.
சேடி—வித்தியாதரருலகு, தோழி. ௨.
உயவை—காக்கணங்கொடி, முல்லைக்கொடி, கான்யாறு. ௩.

செய்யல்—ஒழுக்கம், காவல், சேறு, செய்தொழில். ௪.
நெய்தல்—கடல்சார்ந்தநிலம், நெய்தற்பூ, சாபறை. ௩.
வெய்யோன்—சூரியன், கொடியோன், விருப்புற்றோன். ௩.
ஐயை—பார்ப்பதி, துர்க்கை, மகள், தவப்பெண், தலைவி. ௫.

ஐ—அழகு, இடைச்சொல், கோழை, அரசன், இருமல், தலைவன். ௬.
மை—அஞ்சனம், மேகம், மலடு, இருள், ஆடு, குற்றம் ௬.
கை—இடம், படையுறுப்பு, அலங்காரம், கைத்தலம், சிறுமை, ஒழுக்கம். ௭.
வையம்-தேர், எருது, உரோகிணிநட்சத்திரம், பூமி, சிவிகை, வாகனம்.

சேய்-முருகக்கடவுள், இளமை, தூரம், சிவப்பு, நீளம், மகன், செவ்வாய்
வாய்—ஊதுகுழல், இடம், உண்மை. ௩. மாருதி-அனுமன், வீமன்.
ஆய்தல்—நுண்மை, ஆராய்தல். ௨. ஆறு—வழி, நதி. ௨. வேய்தல்-கூடுதல், மூடுதல். ௨. விநாயகன்--அருகன், விநாயகக்கடவுள்.

அயிர்—கண்டசர்க்கரை, நுண்மணல், நுண்மை. ௩.
செயல்—தொழில், ஒழுக்கம். ௨. தெய்வம்—கடவுள், ஊழ். ௨.
நயம்—மகிழ்ச்சி, இன்பம், நன்மை, பயன். ௪.
பெயர்—பெருமை, புகழ், பேர். ௩.

---

## ரகரவெதுகை.



சிரகமென்பது—கரகம், தலைச்சீரா. ௨.
கரகம்—ஆலங்கட்டி, கமண்டலம், நீர்த்துளி, நீர், கங்கை. ௫.
மரபு—முறைமை, பழமை. ௨. மறல்—பிணக்கு, யமன். ௨.
சரபம்—எண்காற்புள், வரையாடு. ௨.

இரதம்—புணர்ச்சி, மாமரம், இனிமை, அரைஞாண், தேர். ௫.
அரணம்—கவசம், காடு, மதில், வேலி. ௪.
கரணம்—எண், மனமுதலியகரணம், கூத்தின்விகற்பம், காதலோர் கூட்டம், காரணம். ௫. சரணம்—கால், அடைக்கலம்புகுதல்.
தன்னம்—பசுவின்கன்று, அற்பம். ௮.

உரமென்பவலியேஞானமூக்கமேமார்புநாற்பேர்
சிரமென்பநெடுங்காலப்பேர்சென்னியுமன்னதேயாம்
புரமென்பபுரிமுன்மெய்ப்பேர்புரவலன்வள்ளல்வேந்தன்
கரமென்பகிரணஞ்செங்கைகழுதைநஞ்சிறுத்தலும்பேர். (௩)

அரவநூபுரம்பாம்போசையாய்வென்பவருத்தமாய்தல்
பரவைவாரிதிபரப்புப்பங்கயமாதின்கூத்தே
இரலையேகலையூதுங்கொம்பிரண்டுடன்முதனாளென்ப
அரசுமன்னிராச்சியப்பேரம்பிநாவாயேதெப்பம். (௪)

அரம்பைதெய்வப்பெண்வாழையானுமேவயிரதன்மை
சரந்தனிமணிவடம்போர்சாயகநாணற்புற்பேர்
நரந்தமென்பதுநாரத்தைநாறுங்கத்தூரிக்கும்பேர்
சுருங்கையேகரந்துபண்ணுங்கற்படைநுழைவாயிற்பேர். (௫)

ஆரமேபதக்கமுத்தமாத்திசந்தனமேமாலை
வாரநீர்க்கரையேயன்புமலைச்சாரல்கிழமைபங்காம்
தாரம்வல்லிசைநாவெள்ளிதலைவியோரிசைகண்ணென்ப
கோரஞ்சோழன்மாவட்டில்கொடுமைபூமொட்டுவாசி. (௬)

இராசியமறைவேயோனியிறப்பென்பமிகுதிபோக்காம்
பராகமேயிரேணுவாகும்பரிமளமலர்த்தூளும்பேர்
துரோணமேசிம்புள்காக்கைதும்பைவில்லொடுபதக்காம்
இராகமேகீதஞ்செம்மையிச்சையேநிறமுமேற்கும். (௭)

பரிபரிசுமத்தல்வேகம்பாதுகாத்திடல்வருத்தம்
புரிவளைவிரும்பல்செய்தல்புரத்தொடுகயிறுகட்டாம்
பரிதலேயறுத்தலன்புபகர்ந்திடிலிரங்கலும்பேர்
வரிசுணங்கெழுத்துப்பாட்டுவாரிதியிறையேநெல்லு. (௮)

சரிகரவளைவழிப்பேர்சராவமேயகல்சலாகை
கரியவன்சனியின்பேராங்கண்ணனிந்திரனுமாமே
பரிகமேகிடங்குமேடைபகர்மதில்கணையநாற்பேர்
கரில்குற்றங்காழ்த்தலும்பேர்காதைசொற்கதையுமாமே. (௯)

மூரியேபெருமையாற்றன்முறைபீடுநெரிவுமாமே
வாரிநீர்கதவுவெள்ளமதில்கடல்வருவாய்வட்டை
நாரிபன்னாடைபெண்ணேநறவின்னாணிநாற்பேர்
பாரியோர்வள்ளல்கட்டில்பாரிகட்சேமுக்கீர். (௧௦)

உரமென்பது—வலிமை, ஞானம், உள்ளக்கிளர்ச்சி, மார்பு. ச.
சிரம்—நெடுங்காலம், தலை. உ.
புரம்—மருதநிலத்தூர், முன், உடம்பு. ௩. புரவலன்—கொடையு
ளோன், அரசன். உ.
கரம்—சூரியகிரணம், கை, கழுதை, நஞ்சு, குடியிறை. ரு.

அரவம்—சிலம்பு, பாம்பு, ஒலி. ௩. ஆய்வு—வருத்தம், ஆராய்தல். உ.
பரவை—கடல், பரப்பு, திருமகளாடல். ௩.
இரலை—கலைமான், ஊதுகொம்பு, அச்சுவினிநட்சத்திரம். ௩.
அரசு—அரசன், இராச்சியம். உ. அம்பி—மரக்கலம், தெப்பம். உ.

அரம்பை—தெய்வப்பெண், வாழை. உ. ஆணு—இனிமை, நன்மை.
சரம்—மணிவடம், யுத்தம், அன்பு, நாணற்புல். ச.
நரந்தம்—நாரத்தை, கத்தூரி. உ. சுருங்கை-கோட்டையிற்கள்ளவழி,
நுழைவாயில். உ.

ஆரம்—பதக்கம், முத்து, ஆத்திமரம், சந்தனமரம், பூமாலை. ரு.
வாரம்—நீர்க்கரை, அன்பு, மலைச்சாரல், கிழமை, பங்கு. ரு.
தாரம்—வல்லிசை, நா, வெள்ளி, மனைவி, ஏழிசையுளொன்று, கண்.
கோரம்—சோழன்குதிரை, வட்டில், கொடுமை, பூவரும்பு, குதிரை.

இராசியம்—மறைவு, பெண்குறி. உ. இறப்பு—மிகுதி, போதல். உ.
பராகம்—துகள், பூந்தாது. உ. துரோணம்—எண்காற்பட்சி, காகம்,
தும்பை, வில், பதக்கு. ரு.
இராகம்—இசைப்பாட்டு, சிவப்பு, ஆசை, நிறம். ச.

பரி—குதிரை, சுமத்தல், சீக்கிரம், பாதுகாத்தல், வருத்தம். ரு.
புரி—சங்கு, விரும்புதல், செய்தல், நகரம், கயிறு, கட்டு. சா.
பரிதல்—அறுத்தல், அன்புசெய்தல், இரங்கல். ௩.
வரி—தேமல், எழுத்து, இசைப்பாட்டு, கடல், குடியிறை, நெல். சா.

சரி—கைவளை, வழி. உ. சராவம்—அகல், சலாகை. உ.
கரியவன்—சனி, திருமால், இந்திரன். ௩.
பரிகம்—அகழி, மதிலுண்மேடை, மதில், வளைதடி. ச.
கரில்—குற்றம், உரைத்தல். உ. காதை—சொல், கதை. உ.

மூரி—எருது, எருமை, வலிமை, பழமை, பெருமை, நெரிவு. சா.
வாரி—நீர், கதவு, வெள்ளம், மதில், கடல், வருவாய், வழி. எ.
நாரி—பன்னாடை, பெண், வாசனை, வின்னாணி. ச.
பாரி—கடைவள்ளலெழுவரிலொருவன், கட்டில், மனைவி, கள்,
கல்லாடை, கடல். சா.

அருகலேசருங்கல்சார்தலமுதமேசுதைநீர்மோக்கம்
பொருளேசொற்பொருள்பல்பண்டம்பொன்பண்புபின்னைவாய்மை „
குருநிறமோர்கோய்தேயங்குரவன்பாரம்வியாழன்
அருணமென்பதுமான்செம்மையாடெலுமிச்சைநாற்பேர். (௧௧)

முருகுகள்ளிளமைநாற்றமுருகவேள்விழாவணப்பாம்
மருமானேமருமகன்பேர்வழித்தோன்றற்பேருமாமே
இருசுபண்டியுளிரும்புசெவ்வையென்றிருபேரென்ப
கருமையேபெருமையாகுங்கறுப்பொடுவலியுமாமே. (௧௨)

இருத்திமந்தோலேபண்ணல்கெட்டபொய்விட்டபூதம்
விருத்தியேதொழிலிலாபம்விரிபொருள்வளர்ச்சிக்கும்பேர்
அருத்தியாற்றிடைக்குறைப்பேர்தோலுமாந்துட்டைக்கும்பேர்
அரத்தமேயிரத்தஞ்செம்மையரக்கொடுற்பலங்கடம்பு. (௧௩)

சீர்செல்வந்தாளவொற்றுச்சீர்த்திகாத்தண்டேபாரம்
தார்கொடிப்படைபூத்தண்டுதாமங்கிங்கிணியின்கோவை
சூரென்பநோயேயச்சமஞ்சாமையணங்குஞ்சொல்லும்
கார்நீர்வெள்ளாடுமேகங்கறுப்பிருண்மாரிக்காலம். (௧௪)

ஆர்கூர்மையாத்திதேரினைந்துருவாணிக்கும்பேர்
பீரென்பமுலையிற்பாலும்பீர்க்கொடுபசலைக்கும்பேர்
வாரென்பநெடுமைகச்சுமன்னுநீர்நேர்மைநாற்பேர்
நேர்சமமீதல்பாதிநெடிலுடன்பாடுநுட்பம். (௧௫)

அருணன்சூரியன்றேர்ப்பாகனுதித்தன்புதன்மூப்பேரே
வருணமேகுலநீராகுமகனென்பசிறந்தோன்மைந்தன்
தரணிபாரிரவிவெற்பாந்தையல்பெண்ணழகுமாகும்
கரிணியேமுழையும்வெற்புங்களிற்றொடுபிடியுங்காட்டும். (௧௬)

மாரியேவிளிவுகள்ளுவடுகிநோய்மேகமைம்பேர்
ஓரியாண்மயிரோர்வள்ளன்முதுநரிமுசுவென்றேழும்
காரியோர்வள்ளலையன்கடுச்சனிவடுகன்காக்கை
தூரியமிடபமாடைதுந்துபியெழுதுங்கோலே. (௧௭)

பிரமமேவேதம்வேள்விமந்திரம்பிரமன்மாலோ
டிரவிநீமுனிவர்முத்திபீசனம்புவிபன்னொன்றே
அரசனேவியாழன்மன்னுமம்பணந்தோணியானை
குரல்கதிர்சிறகுமாதர்கூந்தல்யாழ்நரம்புநாற்பேர். (௧௮).

அருகலென்பது—குறைதல், கிட்டல். உ. அமுதம்—அமிர்தம், நீர், மோட்சம். ௩. பொருள்—சொற்பொருள், பலபண்டம், பொன், குணம், மகன், உண்மை. ௬.
குரு—நிறம், ஒருவியாதி, ஒருதேசம், ஆசான், பாரம், வியாழன். ௬.
அருணம்—மான் *, சிவப்பு, ஆடு, எலுமிச்சை. ௪.
முருகு—கள், இளமை, வாசனை, முருகன், திருவிழா, அழகு. ௬.
மருமான்—மருகன், மகன். உ.
இருசு—பண்டியுளிரும்பு, செவ்வை. உ.
கருமை—பெருமை, கறுப்பு, வலிமை. ௩.
கிருத்திமம்—தோல், செய்தல், பொய், பூதகணம். ௪.
விருத்தி—தொழில், இலாபம், விரிவுரை, வளர்தல். ௪.
துருத்தி—ஆற்றிடைக்குறை, தோல், தொழுத்தை. ௩.
அரத்தம்—இரத்தம், சிவப்பு, அரக்கு, செங்குவளை, கடப்பமரம். ௫.
சீர்—செல்வம், தாளவொற்று, மிகுபுகழ், [புகழ்], காத்தண்டு, பாரம்.
தார்—கொடிப்படை, மலர், சேனை, பூமாலை, கிங்கிணிமாலை. ௫.
சூர்—வியாதி, அச்சம், அஞ்சாமை, தெய்வப்பெண். ௪.
கார்—நீர், வெள்ளாடு, மேகம், கருமை, இருள், கார்காலம். ௬.
ஆர்—கூர்மை, ஆத்திமரம், தேரினகத்திற்செறிகதிர். ௩.
பீர்—முலைப்பால், பீர்க்கு, பசலை. ௩.
வார்—நீளம், கச்சு, நீர், நேர்மை. ௪.
நேர்—ஒப்பு, கொடுத்தல், பாதி, நீளம், உடன்பாடு, நுட்பம். ௬.
அருணன்—சூரியன்றேர்ப்பாகன், சூரியன், புதன். ௩.
வருணம்—குலம், நீர். உ. மகன்—சிறப்புற்றோன், புத்திரன். உ.
தரணி—பூமி, சூரியன், மலை. ௩. தையல்—பெண், அழகு. உ.
கரிணி—மலைமுழை, மலை, யானை, பெண்யானை. ௪.
மாரி—சாவு, கள், காடுகோள், வியாதி, மேகம். ௫.
ஓரி-ஆண்மயிர், கடைவள்ளலெழுவரிலொருவன், † கிழநரி, ஆண்முசு.
காரி—முதல்வள்ளலெழுவரிலொருவன், ஐயனார், நஞ்சு, சனி, வைரவக்கடவுள், காகம். ௬.
தூரியம்—எருது, வஸ்திரம், வாச்சியப்பொது, எழுதுகோல். ௪.
பிரமம்—வேதம், யாகம், மந்திரம், பிரமன், திருமால், சூரியன், நெருப்பு, இருடிகள், மோட்சம், சிவன், சந்திரன். ௧௧.
அரசன்—வியாழன், இராசன். உ. அம்பணம்—தோணி, ஆமை. உ.
குரல்—கதிர், இறகு, பெண்மயிர், யாழ்நரம்பு. ௪.

---

*அரிணம் - மான். † ஓரி - நரிக்கும்பெயர்.

தோரைநெல்விசற்பமூங்கிலரிசிலைகவலைரசொன்முப்பேர்
ஆரையேமதில்புற்பாயாமகலுளேபரப்பூர்காடே
ஓரையேமாதர்கூடிவிளையாடலுடனிராசி
தாரைகண்மழைசேரோடரூரகைவழியேகூர்மை. (௧௯)

ஊர்திதேர்விமானம்பாண்டிலும்பலேசிவிகைபாய்மா
ஆர்வமேசரகமன்பாமகலமார்பொடுவிசாலம்
ஆர்வலர்கொண்கரன்பானுவென்பதுயிர்நண்மைப்பேர்
ஆர்தலேநிறைதலுண்டலகளந்தான்மிடாகற்றுழி. (௨௰)

பரிரமேகவசந்தோணிபல்லணம்பொறையினோடு
நீருறுகரைவன்பாரநிறைதரைநிகழ்த்துமெண்பேர்
சூரனேயிரவிநோய்துகளென்பகுற்றந்தூளாம்
சாரங்கமானும்வண்டுஞ்சாதகப்புள்ளுமாமே. (௨௧)

ஆரல்கார்த்திகைநாள்செவ்வாயாறுறுப்பொருமீனுற்பேர்
சாரலேமருதயாழினிசையொடுசைலப்பக்கம்
மூரலேநகைபல்சோறுமுரம்பென்பமேடுபாறை
கூரல்புட்சிறகுமாதரோதியுமிருபேர்கூறும். (௨௨)

சாரிகைபூவைசங்கஞ்சுழல்காற்றுத்தானுமாகும்
காரிகையழகுபெண்ணேகலித்துறையோர்நூற்கும்பேர்
வாரணங்கவசங்கோழிதடைசங்குவாரிகைம்மா
பூருவமுதுமைமுன்புகிழக்கென்றும்புகலலாமே. (௨௩)

ஏரழகுழுபெற்றப்பேரிராசிதானேரைகூட்டம்
பாருலகந்தேர்ப்பாராம்பயல்பள்ளம்பாதிசிற்றுள்
போரமர்சதயத்தோடுபுகலுநென்முதலாஞ்சும்மை
பீருவேயச்சமுள்ளோன்பெயரொடுபுருவமாமே. (௨௪)

அருப்பமாரிடகோய்காடாமரனுடனூருமப்பேர்
மரக்காலாயிலியஞ்சோதிமாயவனுடன்முப்பேர்
நிரப்பென்பமிடிநிறைப்பேர்நிறையழியாமைநீர்ச்சால்
அருக்கமேயரண்கத்தூரிகுங்குமமரமுஞ்சொல்லும். (௨௫)

குருதியேசிவப்பிரத்தங்குசனெனக்கூறுமுப்பேர்
பரிதியேயூர்கோள்வட்டம்பாற்கரனேமிநாற்பேர்
சுருதியேயொலிவேதப்பேர்சரமருநெறிகாண்மார்க்கம்
இரதிபித்தநீர்பெண்யானைமதன்றேவியிச்சைநாற்பேர். (௨௬)

தோரையென்பது—ஓர்வகைநெல், வேயரிசி, கையிறை. ௩.
ஆரை—மதில், புற்பாய். ௨. அகலுள்—அகலம், ஊர், நாடு. ௩.
ஓரை—மகளிர்விளையாட்டு, இராசி. ௨.
தாரை—கண், மழை, நேரோடல், நட்சத்திரம், வழி, கூர்மை. ௬.

ஊர்தி—தேர், விமானம், பண்டி, யானை, தண்டிகை, குதிரை. ௬.
ஆர்வம்—நரகம், அன்பு. ௨. அகலம்—மார்பு, விரிவு. ௨.
ஆர்வலர்—நாயகர், அன்புடையோர். ௨. அணு—ஆன்மா, நுட்பம்.
ஆர்தல்—நிறைதல், புசித்தல். ௨. அகளம்—மிடா, சாடி. ௨.

பாரம்—கவசம், தோணி, குதிரைக்கலணை, பொறுமை, நீர்க்கரை, கனம், ஓர்நிறை, பூமி. அ.
சூரன்—சூரியன், நெருப்பு, நாய். ௩. துகள்—குற்றம், புழுதி. ௨.
சாரங்கம்—மான், வண்டு, சாதகப்பட்சி. ௩.

ஆரல்—கார்த்திகைநட்சத்திரம், செவ்வாய், மதில், ஆரான்மீன். ௪.
சாரல்—மருதயாழ்த்திறம், மலைப்பக்கம். ௨.
மூரல்—சிரிப்பு, பல், சோறு. ௩. முரம்பு—மேடு, பாறை. ௨.
கூரல்—பறவையினிறகு, பெண்மயிர். ௨.

சாரிகை—நாகணவாய்ப்புள், சுங்கவிறை, சுழல்காற்று. ௩.
காரிகை—அழகு, பெண், கவித்துறை, ஓர்நூல். ௪.
வாரணம்—கவசம், கோழி, தடுத்தல், சங்கு, கடல், யானை. ௬.
பூருவம்—பழமை, முன்பு, கீழ்த்திசை. ௩.

ஏர்—அழகு,உழுமெருது. ௨. இராசி—மேடமுதலியராசி,கூட்டம்.
பார்—பூமி, தேர்ப்பலகைப்பார். ௨. பயல்-பள்ளம்,பாதி, சிறுபிள்ளை.
போர்—யுத்தம், சதயநட்சத்திரம், நென்முதலியசுமை. ௩.
பீரு—அச்சமுள்ளோன், புருவம். ௨.

அருப்பம்—வழுக்குநிலம், வியாதி, காடு, கோட்டை, ஊர். ரு.
மரக்கால்—ஆயிலியநட்சத்திரம்,சோதிநட்சத்திரம்,திருமால்கூத்து.
நிரப்பு—தரித்திரம், நிறைவு. ௨. நிறை—அழிவின்மை, நீர்ச்சால்.௨.
துருக்கம்—அரண், கத்தூரி, குங்குமமரம். ௩.

குருதி—சிவப்பு, இரத்தம், செவ்வாய். ௩.
பரிதி—பரிவேடம், வட்டம், சூரியன், சக்கராயுதம். ௪.
சுருதி—ஒலி, வேதம். ௨. சுரம்—அரியவழி, காடு, வழி. ௩.
இரதி—பித்தளை, பெண்யானை, மன்மதன்மனைவி, ஆசை. ௪.

புரைகுற்றமுவமையில்லம்புழையுயர்ச்சியுமைம்பேரே
விரைமணஞ்சாந்துதூபம்வீரைதான்றுயரம்வாரி
நரைவெள்ளையிவுளிவெண்மைநந்திநற்சவரிநரை
சுரைகள்ளான்முலைதுளைப்பேர்துரும்பலேதிமிறுள்ளல். (௨௭)

மருளென்பகுறிஞ்சியாழின்றிறத்தொடுமயக்கமும்பேர்
இருளொருநரகமையலிருளொடுகருமையென்ப
பொருநர்போர்த்தலைவர்கூத்தர்புரவலர்பாணர்வீரர்
இருபிறட்பெயிறுபார்ப்புமிந்துவும்புள்ளுமாமே. (௨௮)

மருந்தமேயொருமரஞ்செய்மருதநன்னிலப்பாடற்பேர்
எருவையேகொறுக்கைகோரைகழுகுசெப்பிரத்தமென்ப
தருமராசன்றான்புத்தன்சண்டனோடருகன்றானும்
கரியென்பதிருந்தைசான்றுகறையடிசேகுநாற்பேர். (௨௯)

கருவிபல்லியந்துணைக்காரணங்கள்யாழ்கவசமீட்டம்
பொருபடைக்கலந்தொடர்ச்சிபுயல்பலவினைப்பேர்கூட்டம்
பரியின்பல்லணமேயாடைகசைபதின்முப்பேர்பன்னும்
சுரிகையேகவசம்வாளாந்துவைபிண்ணாக்கிறைச்சியோசை. (௩௦)

குருகுபுள்ளிளமைநாரைகொல்லுலைமூக்குக்கோழி
சரிவெள்ளைமூலநாள்வாசந்தியொன்பான்பேர்சாற்றும்
முரசேயுத்தரட்டாதிப்பேரியமென்றுமொழியலாமே
தரளமேயுருட்சிமுத்தாஞ்சார்வென்பதிடமும்பற்றும். (௩௧)

முரண்வலிபகையாமென்பமொய்ம்புதோள்வலியுமாகும்
உரையென்பவளவிதேய்வாமுவாத்தந்தியிளையோன்பௌவம்
ஞெரேலொலிவிரைவுமாகுநிதியிருநிதிபொன்னென்ப
உருநிறம்வடிவட்டைப்பேரோதனஞ்சோறேயுண்டி. (௩௨)

அரிகிளிபுணரிமாறேரைம்மையிந்திரன்கால்காந்தி
பரிபுகர்பன்றிசிங்கம்பகைபுகைபாயல்சோலை
வரிமதிசேகுதேரைவானரமியமன்மூங்கில்
எரிபுரைநிறம்பொன்பாந்தளிரவிகண்வரிதார்பச்சை. (௩௩)

அரிசெற்கதிர்கள்கூர்மையளிபடைக்கலமேயீர்வாள்
அரிதலேசயனமேயடல்விசிபறையரித்தல்
பரிபுரமதனுமெய்தபரனோடிவ்வாறேழைந்தாம்
அரிதமேபசுமைதிக்காமார்ப்பொலிசிரித்தற்பேரே. (௩௪)

புரையென்பது—குற்றம், ஒப்பு, வீடு, உட்டுளை, உயர்ச்சி. ரு.
விரை—வாசனை, கலவைச்சாந்து, நறும்புகை. க.
வீரை—துன்பம், கடல். உ.
நரை—வெள்ளைக்குதிரை, வெண்மை, இடபம், சாமரம், நாரை. ரு.
சுரை—கள், பசுவின்முலை, உட்டுளை. ங. துளும்பல்-திமிறல், துள்ளல்.

மருள்—குறிஞ்சியாழ்த்திறம், மயக்கம். உ.
இருள்—ஓர்நரகம், மயக்கம், இருள், கறுப்பு. ச.
பொருநர்—படைத்தலைவர், நாடகர், அரசர், புகழ்ந்துபாடுவோர், வீரர்
இருபிறப்பு—பல், பிராமணர், சந்திரன், பறவை. ச.

மருதம்—ஓர்மரம், வயல், மருதநிலத்திராகம். க.
எருவை—கொறுக்கை, கோரை, கழுகு, செம்பு, இரத்தம். ரு.
தருமராசன்—புத்தன், யமன், அருகன். ங.
கரி—கரி, சாட்சி, யானை, மரவயிரம். ச.

கருவி—வாச்சியம், உபகரணம், யாழ், கவசம், ஈட்டம், ஆயுதப்பொது,
தொடர்பு, மேகம், பலவினைப்பேர், கூட்டம், குதிரைக்கலணை,
வஸ்திரம், குதிரைச்சம்மட்டி. கங.
சரிகை—கவசம், உடைவாள். உ. துவை—பிண்ணாக்கு, தசை, ஒலி.

குருகு—பறவைப்பொது, இளமை, நாரை, கொல்லனுலைமூக்கு,
கோழி, கைவளை, வெண்மை, மூலநட்சத்திரம், குருக்கத்தி. கூ.
முரசு—உத்தரட்டாதிநட்சத்திரம், வாச்சியப்பொது. உ.
தாளம்—உருட்சி, முத்து. உ. சார்வு—இடம், பற்று. உ.

முரண்—வலிமை, பகை. உ. மொய்ம்பு—புயம், வலிமை. உ.
உரை—சொல், தேய்தல். உ. உவா—யானை, இளையோன், பூரணை.
ஔரேல்—ஒலிக்குறிப்பு, விரைவுக்குறிப்பு. உ. நிதி—சங்கநிதி, பதும
நிதி, பொன். க.
உரு—நிறம், வடிவு, அட்டை. ங. ஓதனம்—சோறு, உணவு. உ.
அரி—கிளி, கடல், திருமால், தேர், தகடு, இந்திரன், காற்று, ஒளி,
குதிரை, குற்றம், பன்றி, சிங்கம், பகை, புகை, பாயல், சோலை,
வரி, சந்திரன், மரவயிரம், தவளை, குரங்கு, யமன், மூங்கில்,
நெருப்பு, உட்டுளை, நிறம், பொன், பாம்பு, சூரியன், கண்வரி,
பூமாலை, பச்சை. கஉ.
அரிசி, நெற்கதிர், கள், கூர்மை, வண்டு, ஆயுதம், அரிவாள், அரி
தல், சயனம், சக்கராயுதம், வலிமை, விசிப்பலகை, பறை, அரி
த்தல், சிலம்பினுட்பருக்கைக்கல். கநி. (ஆ. சஎ.)
அரிதம்—பச்சைநிறம், திக்கு. உ. ஆர்ப்பு—ஒலி, களைப்பு. உ.

அருவியேமலைச்சார்வாறுமரிதினைத்தாளுமாகும்
அரலையேகனி * வித்தாழிமரல்கழலையுமாமென்ப
கரடமேமதம்பாய்கின்றசுவட்டொடுகொக்கையாகும்
சுரியன்றன்பெண்மயிர்க்கேசொல்லுமாண்மயிர்க்கும்பேராம். (௧௫)
திருவென்பகமலைசெல்வஞ்சிறப்பொடுமுப்பேர்செப்பும்
பரிவென்பதன்பமின்பம்பகருமன்பிற்குமப்பேர்
கரையேசீர்க்கரைசேர்வாருங்கைத்துநீளிதிவெவ்றுப்பாம்
சுரருருமகவான்றேவீமந்திரியிருபேர்சொல்லும். (௧௬)
அரற்றலேயழுகையோசையைத்தென்பவிரைவுநோய்தாம்
இரத்தஞ்செந்நீர்சிவப்பாமிலாங்கலியலர்தென்காந்தள்
அரக்கென்பமெழுகுகள்ளின்விகற்பமுஞ்சிவப்புமாகும்
அருச்சனமருதுவெண்மையறிக்கைதானறிவுபற்றும். (௧௭)
அரந்தையென்பதுகுறிஞ்சியாழிசைதுன்பமாகும்
அருந்தலேயருமையுண்டலளித்தலுன்கொடுத்தல்காத்தல்
அரங்கமாற்றிடைக்குறைப்பேராடிடஞ்சபையுமப்பேர்
அரங்குபோரிடம்வட்டாடுமிடஞ்சபைமனைவிகற்பாம். (௧௮)
முருந்தென்பமயிலின்றோகைமுதன்முள்ளுந்தவளமாகும்
விருந்தயேகிளையின்கூட்டம்விலங்கின்கூட்டமுமென்றாகும்
குரங்குவானரம்விலங்கின்பொதுமிகுகோணலாகும்
எருந்துரல்கிளிஞ்சிலென்பரிடஞ்செல்வம்விசாலம்வாமம். (௧௯)
ஆரியர்மிலேச்சர்நல்லோராரணென்பதிடைச்சொலாவாம்
ஆரியேகதவுசோழனழகொடுமேன்மைக்கும்பேர்
காருகர்தந்துவாயர்கடுங்கொலையாளர்வண்ணார்
தாரகாரியென்பகாளிசண்முகன்றானுமாமே. (௨0)
சார்கூடலொருதாருப்பேர்சான்றோன்மான்றலைநாள்பானு
வேரென்பமரவேர்வேர்வாம்விழைச்சுநல்விளமைபோகம்
பாராவாரந்தான்வாரிகடற்கரையிருபேர்பன்னும்
சாரணரொற்றரென்பசமண்முனிவர்க்கும்பேராம். (௨௧)
அராகஞ்செந்நிறமேபாலையாழ்முடுகியல்பாட்டாசை
கரேணுவேபிடியானைக்குங்கடுங்கொலையானைக்கும்பேர்
கிராணமேகிராணமூக்காங்கிளர்சிறுவட்டிலும்பேர்
கரீரமேமிடாவகத்திகரியின்பல்லடிமுளைப்பேர். (௨௨)

ரகரவெதுகை முற்றிற்று.
ஆ விருத்தம்-௨0௬.

* கன்னி - கனியெனவிகாரமாயிற்று.

அருவியென்பது—மலைச்சாரலாறு, தினைத்தாள். ௨.
அரலை—தூர்க்கை, விதை, கடல், மரற்செடி, கழலை. ௫
கரடம்—மதம்பாய்சுவடு, காகம். ௨.
சுரியல்—பெண்மயிர், ஆண்மயிர். ௨.

திரு—திருமகள், செல்வம், சிறப்பு. ௩.
பரிவு—துன்பம், இன்பம், அன்பு. ௩.
கரை—நீர்க்கரை, சேர்வு. ௨. கைத்து—பொன், வெறுப்பு. ௨.
சுரகுரு—இந்திரன், வியாழன். ௨.

அரற்றல்—அழுதல், ஒலி. ௨. ஐது—சீக்கிரம், நுண்மை. ௨.
இரத்தம்—உதிரம், சிவப்பு. ௨. இலாங்கலி—கலப்பை, தென்னமரம்,
செங்காந்தள். ௩. அரக்கு—மெழுகு, கள்ளின்விகற்பம், சிவப்பு.
அருச்சுனம்—மருதமரம், வெண்மை. ௨. அறிக்கை—அறிவு, பற்று.

அரந்தை-குறிஞ்சியாழிசை, துன்பம். ௨. அருந்தல்-அருமை, உண்டல்
அளித்தல்—கொடுத்தல், காத்தல். ௨.
அரங்கம்—ஆற்றிடைக்குறை, நாடகசாலை, சபை, ௩.
அரங்கு—போர்க்களம், சூதாடுதற்குவகுத்தவறை, சபை, மனையின்
விகற்பம். ௪.

முருந்து—மயிலிறகினடிமுள், வெண்மை. ௨.
விருந்தம்—சுற்றத்தின்கூட்டம், விலங்கின்கூட்டம். ௨.
குரங்கு—குரங்கு, விலங்கின்பொது, வளைவு. ௩.
எருந்து-உரல், கிளிஞ்சில். ௨. இடம்-செல்வம், விசாலம், இடப்பக்கம்.

ஆரியர்—மிலேச்சர், நல்லோர். ௨. ஆன்—இடைச்சொல், பசு. ௨.
* ஆரி—கதவு, சோழன், அழகு, மேன்மை. ௪.
காருகர்—நெய்வோர், கொலையாளர், வண்ணார். ௩.
தாரகாரி—காளி, முருகக்கடவுள். ௨.

சார்—கூடுதல், ஒருமரம். ௨. சான்றோன்—மிருகசீரிடநட்சத்திரம்,
சூரியன். ௨.
வேர்—மரவேர், வேர்வை. ௨. விழைச்சு—இளமை, புணர்ச்சி. ௨.
பாராவாரம்-கடல், கடற்கரை. ௨. சாரணர்-ஒற்றர், சமணவிருடிகள்.

அராகம்—செந்நிறம், பாலையாழ்த்திறம், முடுகியல், பாட்டு, ஆசை. ௫.
கரேணு—பெண்யானை, யானை. ௨.
கிராணம்—கிரகணம், மூக்கு, சிறுவட்டில். ௩.
கரீரம்—மிடா, அகத்திமரம், யானைப்பல்லடி, முளை. ௪.

---

* அரரி - கதவு.

# லகரவெதுகை.



புலவர்பாடுநேரகூத்தர்புதனும்பர்கவிகளோவர்
வலவனேவெற்றியாளன்மருவுந்தேர்ப்பாகன்மாயோன்
அலகுநெற்கதிரேயாதிபலகறைநளம்பெண்ணேதி
அலரிகண்வரியருக்கனழகொருமரம்பூவாமே. (௧)

ஆலமேவடவிருக்கமநஞ்சோடலர்பூநீராம்
மூலம்வேர்முதலேயடியதுமுதிர்வுறுகிழங்கோர்நாளாம்
சீலமேகுணந்தண்டித்தறிகழ்சரித்திரமும்பேரே
சாலமேவலைசாலேகமராமரஞ்சபைமதிற்பேர். (௨)

காலம்வைகறைகாலப்பேர்கலமலம்யாழ்பூணுவாய்
சாலகங்காலதர்ப்பேர்தானேபூமொட்டுமாகும்
தாலமுண்கலமேநாவேதராதலம்பனையேநாற்பேர்
ஆலலாடுதெலொலிப்பேராறுவைசித்திரைநாளாடை. (௩)

இலம்பகமத்தியாயநுதற்சூட்டென்றிருபேராமே
இலஞ்சிமாவாவிகொப்பூழெயில்குணமகிழேயேரி
பலங்கனிபயன்காய்சேனைபலங்கிழங்கறுபேராகும்
அலங்கலென்பதுபூமாலையசைவொடுதளிரிலங்கல். (௪)

ஒலியென்பதிடியேகாற்றேயோசையென்றுமுப்பேர்
ஒலியலேயாறுந்தோலுமுடுத்தவாடையும்பைந்தாரும்
கலுழியேகான்யாறென்பகலங்கியநீருமாமே
கலைமதிப்பங்குதூசுகல்விநூலிரலைகாஞ்சி. (௫)

பீலியேயாலவட்டம்பெருவரைகலாபிதோகை
பாலிகையுதடுவட்டம்படைவாளின்முட்டியும்பேர்
வேலியூர்மதில்காவற்பேர்மெத்தைமெல்லணையேசட்டை
தோலிபம்வனப்புவார்த்தைதுருத்திதோற்பலகையைம்பேர். (௬)

பாலையோர்மரநிலம்மந்நிலத்தினிற்பாடலும்பேர்
வேலையேகடலதற்குமேவியகரையேகாலம்
மாலையேயிரவோடந்திமாலிகையொழுங்குநாற்பேர்
சாலையேகுதிரைப்பந்தியறப்புறந்தானுமாமே. (௭)

அல்லிவெள்ளாம்பல்காயாவகவிதழாகமுப்பேர்
அல்லிராவிருளேயென்பவாகமார்புடலுமாமே
சில்லியேவட்டங்கீரைதேருருள்சிள்வீடென்ப
வல்லியாய்ப்பாடிவள்ளிவலைவொடுநீளமாமே. (௮)

# லகரவெதுகை.

புலவரென்பது-பாடுவோர்,கூத்தர்,புதன்,தேவர்,பண்டிதர்,கம்மாளர்
வலவன்—வெற்றியாளன், தேர்ப்பாகன், திருமால். ௩.
அலகு—நெற்கதிர்முதலியன, பலகறை, நளம்பு, இலக்கம், ஆயுதம்.
அலரி—கண்வரி, சூரியன், அழகு, ஓர்மரம், பூப்பொது. ௫.
ஆலம்—ஆலமரம், நஞ்சு, மலர்ந்தபூ, நீர். ௪.
மூலம்—வேர், முதல், காரணம்,கிழங்கு, ஒருநட்சத்திரம். ௫.
சீலம்—குணம், தண்டித்தல், சரித்திரம். ௩.
சாலம்—வலை, பலகணி, ஆச்சாமரம், கூட்டம், மதில். ௫.
காலம்—விடியற்காலம், பொழுது. ௨.
கலம்—கலப்பை, யாழ், ஆபரணம், மரக்கலம். ௪.
சாலகம்—பலகணி, பூவரும்பு. ௨. தாலம்-உண்கலம்,நா,பூமி,பனை.
ஆலல்—ஆடுதல்,ஒலி. ௨. அறுவை-சித்திரைநட்சத்திரம்,வஸ்திரம்.
இலம்பகம்—அத்தியாயம், நுதலணிமாலை. ௨.
இலஞ்சி—மாமரம், வாவி, கொப்பூழ், மதில், குணம்,மகிழமரம்,ஏரி.
பலம்—பழம், பயன், காய், சேனை, வலிமை, கிழங்கு. ௬.
அலங்கல்—பூமாலை, அசைதல், தளிர், ஒளிசெய்தல். ௪.
ஒலி—இடி, காற்று, ஓசை. ௩.
ஒலியல்—நதி, தோல், வஸ்திரம், பூமாலை. ௪.
கலுழி—கான்யாறு, கலங்கனீர். ௨.
கலை—மதியின்பங்கு, சீலை, கல்வி, நூல், கலைமான், மேகலை. ௬.
பீலி—ஆலவட்டம், மலை, மயில், மயிற்றோகை. ௪.
பாலிகை—உதடு, வட்டம், படைவாளின்முட்டி. ௩.
வேலி—ஊர், மதில், காவல். ௩. மெத்தை—அமளி, சட்டை. ௨.
தோல்—யானை, * எண்வகைவனப்பிலொன்று, சொல், துருத்தி,
தோற்பலகை. ௫.
பாலை—ஓர்மரம், ஓர்நிலம், பாலைநிலப்பாடல். ௩.
வேலை—கடல், கடற்கரை, காலம். ௩.
மாலை—இரா, அந்திப்பொழுது, மாலை, ஒழுங்கு. ௪.
சாலை—குதிரைப்பந்தி, அறச்சாலை. ௨.
அல்லி—வெள்ளாம்பல், காயாமரம், அகவிதழ். ௩.
அல்—இரா, இருள். ௨. ஆகம்—மார்பு, உடம்பு. ௨.
சில்லி—வட்டம், சிறுகீரை, தேருருள், சிள்வீடு. ௪.
வல்லி—இடைச்சேரி, படர்கொடி, அளவு, கால்விலங்கு. ௪.

---

* எண்வகைவனப்பு:"அம்மையழகுதொன்மைதோல்விருந்-தியைபு புலனிழை பெனவனப் பெட்டே." என்னுஞ்சூத்திரத்தாலறிக.

இல்லில்லாளில்லையென்றலிராசிசாவிடம்வீடாறே
மல்வளம்வலியினோடுமாயவனுடன்மூப்பேர்
சில்லையென்பதுபிரண்டைசிள்வீடுதூர்த்தைக்கும்பேர்
ஒல்லையேவிரைவுதொல்லைகடப்புடன்சிறுபோதாமே. (௯)

வில்லென்பமூலநாளாம்வெஞ்சிலையொளியுமப்பேர்
வல்வலிவிரைவுசூதாமலர்தலேயெதிர்தலென்றல்
புல்புலிபுணர்ச்சிபுன்மைபுதல்பனையனுடநாளாம்
கொல்லென்பதசைச்சொலையங்கொலையேவல்வருத்தநாற்பேர் (௧௦)

மால்புதன்பெருமைமேகமாயவன்மயக்கங்காற்றே
ஆலோடவிரண்டுசொல்லுமாமென்பதல்லவும்பேர்
வால்வெண்மைமிகுதிதூய்தாம்வசந்தனேதென்றல்காமன்
சால்புமாட்சிமைசான்றாண்மைசாற்றியவிருபேர்தானே. (௧௧)

வலம்புரிசங்குநந்தியாவர்த்தமோர்மரமூப்பேரே
புலம்பொலிதனிமையச்சம்பொய்யென்பபொக்கம்பொந்தாம்
சிலம்பொலிநெகிழிகுன்றஞ்செருந்திபஞ்சரம்வாட்கோரை
விலங்குகாற்றலைகுறுக்குமிருகத்தின்பொதுவுமாமே. (௧௨)

உலகமேதிசைவிண்பூமியுயர்குணஞ்சனமுயர்ந்தோர்
அலவனேஞெண்டுநூளையும்புலிகடகராசி
இலயமேகூத்துங்கூத்தின்விகற்பமுமிருபேரென்ப
வலைவஞ்சப்பெண்வல்லோன்வருடைதான்சிம்புளாடாம். (௧௩)

கலாபமேமணிவடம்மேகலைமயிலிறகுமூப்பேர்
சிலீமுகமுலைக்கண்வண்டுசித்திரபுங்கந்தானும்
சலாகைநன்மணிநாராசஞ்சவளமுமாகுமென்ப
விலோதம்பெண்மயிர்பதாகைவிடமென்பகஞ்சந்தேனும். (௧௪)

செல்விடியேவன்மேகஞ்சிதலையுமாகுமென்ப
எல்லொளிபகலிகழ்ச்சியிரவுடனிரவியைம்பேர்
சொல்லுரைகீர்த்திநெல்லாந்தொடுத்தலேவளைத்தல்கட்டல்
கல்லொலிமலைகல்லென்பகரண்டீர்க்காக்கைசெப்பாம். (௧௫)

கலிவஞ்சமொலியேவாரிகடையுகம்வலியைம்பேரே
சிலையொலிமலைகல்வில்லாஞ்செடியொளிசெறிவுதீதாம்
தலமென்பதிலைபுவிப்பேர்தலையிடந்தலைவிண்ணோதி
திலமேமஞ்சாடியெள்ளாந்திலகமஞ்சாடிபொட்டாம். (௧௬)

இல்லென்பது—மனைவி, இல்லையெனல், இராசி, சா, இடம். [illegible]
மல்—வளம், வலிமை, திருமால்கூத்து. ங.
சில்லை—பிரண்டை, சிள்வண்டு, தூர்த்தை. ங.
ஒல்லை—காலவிரைவு, பழமை, வேகம், சிறுபொழுது. ச.

வில்—மூலநட்சத்திரம், வில், ஒளி. ங.
வல்—வலிமை, சீக்கிரம், சூதாடுகருவி. ங.
மலர்தல்—எதிர்தல், தோன்றல். உ. புல்—புலி, கலவி, அற்பம்,
புல், பனை, அனுடநட்சத்திரம். சு.
கோல்—அசைச்சொல், ஐயம், கொல்லனேவல், வருத்தம். ச.

மால்—புதன், பெருமை, மேகம், திருமால், மயக்கம், காற்று. சு.
ஆல்--ஆலென்பதற்குப்பெயர். க. அல்--அல்லவென்பதற்குப்பெயர்.
வால்—வெண்மை, மிகுதி, சுத்தம். ங. வசந்தன்—தென்றல், மன்
மதன். உ. சால்பு—மாட்சிமை, சால்புடைமை. உ.

வலம்புரி—சங்கு, நந்தியாவர்த்தம், ஓர்மரம். ங.
புலம்பு—ஒலி, தனிமை, பயம். ங. பொய்-அபத்தம், மரப்பொந்து. உ.
சிலம்பு—ஒலி, சிலம்பு, மலை. ங. செருந்தி-செருந்திமரம், வாட்கோரை
விலங்கு—கால்விலங்கு, குறுக்கு, மிருகத்தின்பொது. ங.

உலகம்—திக்கு, ஆகாயம், பூமி, குணம், சனம், உயர்ந்தோர். சு.
அலவன்—நண்டு, பூனை, சந்திரன், கடகராசி. ச.
இலயம்—கூத்து, கூத்தின்வேறுபாடு. உ. வலவை—காளியேவற்
பெண், வல்லவன். உ. வருடை—எண்காற்புள், ஆடு. உ.

கலாபம்—மணிவடம், பதினாறுகோவைமணி, மயிலிறகு. ங.
சிலீமுகம்—முலைக்கண், வண்டு, அம்பு. ங.
சலாகை—தெய்வகன்மணி, சலாகை, சவளம். ங.
விலோதம்—கூந்தல், பெருங்கொடி. உ. விடம்—நஞ்சு, *தேள். உ.

செல்—இடி, செல்லெனேவல், மேகம், கறையான். ச.
எல்—பிரகாசம், பகல், இகழ்ச்சி, இரா, சூரியன். ரு.
சொல்—வார்த்தை, புகழ், நெல். ங. தொடுத்தல்-வளைத்தல், கட்டல்.
கல்—ஒலி, மலை, கல்லு. ங. கரண்டம்—†நீர்க்காக்கை, செப்பு. உ.

கலி—வஞ்சனை, ஒலி, கடல், கடையுகம், வலிமை. ரு.
சிலை—ஒலி, மலை, கல், வில். ச. செடி—பிரகாசம், நெருக்கம், தீமை.
தலம்—இலை, பூமி. உ. தலை—இடம், சிரசு, ஆகாயம், முதல். ச.
திலம்—மஞ்சாடிமரம், எள்ளு. உ. திலகம்—மஞ்சாடிமரம், பொட்டு.

* தனிவிடம் - தேள். † காரண்டம் - நீர்க்காக்கை.

[illegible]சைவுமைத்தாம்வடமணிவடமாரூம்பு
பல்லமோர்கணைக்குப்பாணம்பல்லணைக்கரடிகாத்பேர்
மல்லலேவலிவளப்பேர்வாவிபைம்புலன்கடைப்பேர்
முல்லைமல்லிகையேயென்றிமுல்லைகன்னிலங்கற்பாமே. (௧௭)

கோலென்பதீட்டிவாட்கோறுகிலிகைதுலாஞ்சம்மட்டி
சேலமன்னவன்றன்செங்கோறிரட்சியாழ்சரம்போடம்பு
நீலவஞ்சனக்கோலேடுகீளிலக்கையும்பண்ணோர்பேர்
காலிவிபருணன்பாம்புகாற்றெருமுப்பேராமே. (௧௮)

கூலமேபண்ணிகாரம்புனற்கரைகோவிலங்கின்
வாலோடாவணமேபாகல்வரம்பொருகுரங்கெண்பேரே
காலிடமரக்கால்பின்னைகுறுந்தறிவணங்காம்பூற்றம்
காலணங்குரங்கால்வாய்க்கால்காற்றுத்தேருருள்பன்மூன்றே. (௧௯)

கோலமேயழகுபன்றிபாக்குநீர்க்கொழுந்துபீர்க்காம
மாலியேயிரவிகள்ளாமாந்தலேமரிததுண்டல்
வேலயில்படைக்கலப்பேர்வேதண்டங்கைலைவெற்பாம்
சாலிநெற்பொதுவுங்கள்ளுமருந்ததிதானுமாமே. (௨0)

உலவைகான்மரத்தின்கொம்போடிறதழைவிலங்கின்கோடாம
மலைதலேபொரல்குடற்பேர்மந்திரிகுபேரன்வெள்ளி
யலர்பழிவிசிபூரீராமவிர்தலேயொளிபீறற்பேர்
வலிபூரகாளொலிப்பேரிரணம்பொன்கடன்மாணிக்கம. (௨௧)

ஆலயநகரங்கோயிலானையின்கூடமுப்பேர்
பாலமேமழுநெற்றிப்பேர்பவித்திரஞ்சுசிதருப்பை
நூலோர்மந்திரிகள்பார்ப்பார்நுவல்கவிப்புலவர்கரும்போ
வேலாவலயந்தான்பூமிவிரிகடலிருபேராமே. (௨௨)

குவிலேகருப்பப்பெண்ணுந்துர்க்கையுஞ்சிவனுமுப்போ
வலியேயலாயுதன்பிட்டிங்கையின்மன்னன்பேராம்
பாலியுடையியல்புதிக்குப்பருத்தல்பாலென்னுமைம்பேர்
வலமைமயிர்ச்சாந்தோடேயேலத்தின்பேருமாமே. (௨௩)

லகரவெதுகை முற்றிற்று.

ஆ. விருத்தம் - உ௨௧.

வல்லையென்பது—காடு, காலவிரைவு, வலிமை. ங. வடம்—மணிவடம், ஆலமரம், கயிறு. ங.
பல்லம்—ஓரெண், அம்பு, குதிரைக்கலணை, கரடி. ச.
மல்லல்—வலிமை, வளம். உ. வாயில்—ஐம்புலன், வாயில். உ.
முல்லை—வனமல்லிகை, வெற்றி, முல்லைநிலம், கற்பு. ச.

கோல்—ஈட்டி, விட்டேறு, எழுதுகோல், துலாம், குதிரைச்சம்மட்டி, செங்கோல், திரட்சி, யாழினரம்பு, பாணம், அஞ்சனக்கோல், இலந்தை. கக.
காலிலி—சூரியன்றேர்ப்பாகன், பாம்பு, காற்று. ங.

கூலம்—பலபண்டம், நீர்க்கரை, பசு, விலங்கின்வால், கடைவீதி, பாகல், வரம்பு, குரங்கு. அ.
கால்—இடம்,மரக்கால்,புத்திரன்,குறுந்தறி,காடு,மலர்க்காம்பு, ஊன்றுகோல், காலன், மூலை, பாதம், வாய்க்கால்,காற்று,தேருருள்.

கோலம்—அழகு, பன்றி, பாக்கு, நீரோட்டம், பீர்க்கு. ரு.
மாலி—சூரியன், கள். உ. மாந்தல்—சாதல், உண்டல். உ.
வேல்—வேலாயுதம், ஆயுதப்பொது.உ.வேதண்டம்—வெள்ளிமலை, மலை. உ.
சாலி*—நெற்பொது, கள், அருந்ததி. ங.

உலவை—காற்று, மரக்கொம்பு, தழை, விலங்கின்கொம்பு. ச.
மலைதல்—பொருதல், அணிதல்.உ. மந்திரி—குபேரன், சுக்கிரன்.உ.
அலர்—பழிமொழி, மலர்ந்தபூ,*நீர்.ங.அலிர்தல்-ஒளிசெய்தல், பீறல்
எலி—பூரநட்சத்திரம்,எலி.உ.இரணம்—பொன்,கடன், மாணிக்கம்.

ஆலயம்—நகரம், தேவர்கோயில், யானைக்கூட்டம். ங.
பாலம்—மழுப்படை, நெற்றி. உ.
பவித்திரம்—தூய்மை, தருப்பை. உ.
நாலோர்—மந்திரிகள், பிராமணர், புலவர். ங. வேலாவலயம்-பூமி, கடல். உ.

சூலி—கருப்பவதி, துர்க்கை, சிவன். ங.
வாலி—பலதேவன், கிட்கிந்தைமன்னன். உ.
பால்—பக்கம், குணம், திசை, பங்கு, பால். ரு.
ஏலம்—மயிர்ச்சாந்து, ஏலம். உ.

---

* மறையவர் - நீர்.

# வகரவெதுகை.

நவமென்பபுதுமைகேண்மையொன்பதாநற்கார்காலம்
கவனமேகலக்கம்வெம்மைமருநிரையின்கதிபோர்காடாம்
உவணமேகருழுறுருமுயர்ச்சிக்குங்கழுகுக்கும்பேர்
பவனமேயிராசிபூமிபடர்காற்றுமனையேகோயில். (க)

புவனநீர்புவியுமாகும்புரத்தலேகாத்தல்வண்மை
துவிதைநாலுண்மையின்டிநாலேசாத்திரமுந்தக்கும்
தவவென்பமிகுதிகுன்றறக்கேநூல்சாத்திரப்பேர்
சிவகன்மைகுறணிமுத்திசிவனேயுயிர்வியாழன். (உ)

இவறலேமறவியாசையென்பபேசிச்சைக்கும்பேர்
இவர்தலேயெழுச்சியாசையேறுதல்சேறன்மேவல்
கவவென்பபுள்ளின்மூக்குங்கவர்க்கழுஞ்சண்டனும்பேர்
குவவென்பதிரட்சிமற்றுங்குவிதலேபெருமைக்கும்பேர். (ங)

தவிசென்பதவேக்குமெத்தையிலகடமுப்பேர்தானே
சவிமணிக்கோவைசெவ்விசாற்றியவனப்புக்காந்தி
நவிரமேமஞ்ஞைபுன்மைகன்மலையுடனேயுச்சி
கவிலல்சொல்லுதல்பண்ணற்பேர்கவியமேமழுக்கோடாலி. (ச)

கவுசிகம்விளக்குத்தண்டோர்பண்பட்டுக்கடியகோட்டான்
சவுரியேதிருமால்கள்வன்சனியமனிவையநாற்பேர்
மவுலியேமுடிகோடீரம்வட்கலென்பதுநாண்கேடாம்
கவலைசெந்திலையோர்வல்விகவர்வழிதன்பநாற்பேர். (ரு)

சேவகம்வீரம்யானைதுயிலிடந்துயிலுஞ்செப்பும்
செவிளியோர்மருந்துசெக்வழித்திறத்தோரோசை
ஆவணம்புணர்தம்வீதியங்காடியுரிமைநாற்பேர்
சிவியேநடைத்தவிடைகேருங்குகோய்சகழுப்பேரே. (சு)

உவளகமதிலோர்பக்கமுருவியபள்ளமுள்ளில்
கவடென்பகப்பியானைக்கழுத்திபுரசைக்கும்பேர்
சிவையுமைமரவேர்கொள்ளிநரிமுகந்திரியுமோரி
கவையேயாயிலியங்காவிதெர்வழியென்விளக்காம். (எ)

செப்பென்பசினைமுஞ்செம்மையுடன்சினைக்குறிப்புமுப்பேர்
உவப்பென்பமகிழ்ச்சிமேடாமொழுக்கமேவழியாசாரம்
தெவிட்டலேயுடைத்தல்[illegible]மொலியுஞ்செப்பும்
[illegible]டாகுமுழவொலிபம்விதானம். (அ)

# வகர வெதுகை.

நவமென்பது—புதுமை, கட்பு, ஒன்பது, கார்காலம். ௪.
கலனம்—கலக்கம், வெப்பம், குதிரைகடை, போர், காடு. ௫.
உவணம்—கருடன், உயர்ச்சி, கழுகு. ௩.
பவனம்—இராசி, பூமி, காற்று, வீடு, அரசரில். ௫.

புவனம்—நீர், பூமி. ௨. புரத்தல்—காத்தல், கொடுத்தல். ௨.
நுவணை—கல்விநூல், நுட்பம், மா. ௩. நூல்—சாத்திரம், பஞ்சிநூல். ௨.
நவ—பிருதி, குறைதல். ௨. தந்து—பஞ்சிநூல், சாத்திரம். ௨.
சிவம்—நன்மை, குறுணி, மோட்சம். ௩. சீவன்—உயிர், வியாழன். ௨.

இவறல்—மறதி, ஆசை, வேட்கைப்பெருக்கம். ௩.
இவர்தல்—எழுச்சி, ஆசை, ஏறுதல், செல்லுதல், மேவுதல். ௫.
சுவ்வு—பறவைமூக்கு, சுவர்க்கம், மூஞ்சூறு. ௩.
குவவு—திரட்சி, குவிதல், பெருமை. ௩.

தவிசு—தடுக்கு, மெத்தை, யானைமேற்றவிசு. ௩.
சவி—மணிக்கோவை, செவ்வை, அழகு, ஒளி. ௪.
நவிரம்—மயில், புன்மை, மலை, உச்சி. ௪.
நவிலல்—சொல்லல், செய்தல். ௨. நவியம்—மழுப்படை, கோடாலி

கவுசிகம்—விளக்குத்தண்டு, ஓர்பண், பட்டுச்சீலை, கோட்டான். ௪
சவுரி—திருமால், கள்வன், சனி, யமன். ௪
மவுலி—முடி, சடை. ௨. வட்கல்—நாணம், கெடுதல். ௨
கவலை—கம்பு, ஓர்கொடி, கவர்வழி, துன்பம். ௪.

சேவகம்—வீரம், யானைதுயிலிடம், நித்திரை. ௩.
சீவனி—ஓர்மருந்து, செவ்வழித்திறத்திறனிசை. ௨.
ஆவணம்—புனர்பூசநட்சத்திரம், தெரு, கடைவீதி, உரிமை. ௪.
நீவி—துடைத்தல், வஸ்திரம், கொய்சகம். ௩.

உவளகம்—மதில், ஓர்பக்கம், குளம், பள்ளம், அந்தப்புரம். ௫.
கவடு—மரக்கொம்பு, யானைக்கழுத்திடுகயிறு. ௨.
சிவை—பார்ப்பதி, மரவேர், கொல்லனுலைமூக்கு, நரி. ௪.
கவை—* ஆயிலியநட்சத்திரம், காடு, கவர்வழி, எள்ளிளங்காய். ௪

சிவப்பு—கோபம், சிவப்பு, கோபக்குறிப்பு. ௩.
† உவப்பு—களிப்பு, மேடு. ௨. ஒழுக்கம்—வழி, ஒழுக்கம். ௨.
தெவிட்டல்—அடைத்தல், உமிழ்தல், நிறைதல், ஒலித்தல். ௪
துவக்கு—தோல், பிணக்கு. ௨. சூழல்—இடம், ஆராய்தல். ௨.

* கௌவை-ஆயிலியநட்சத்திரம். † உவப்பு - உயர்ச்சி.

சேவலென்பது—காவல், சேறு, மயிலுமெழாலுமொழிந்தபறவை யாண். ந. கேவலம்—தனிமை, மோட்சம். உ. ஷீரம்-பால், இனி. உ.
பூவை—நாகணவாய்ப்புள், காயா. உ.
புலி—சிங்கம், புலி, நால்வகைச்சாந்திலொன்று. ந.
வாவல்—வெளவால், கடத்தல். உ.

சுவல்—பிடர், தோண்மேல், மேடு, குதிரைமயிர். ச.
கவி—குரங்கு, புலவன், சுக்கிரன். ந. கழி—மிகுதி, காயல். உ.
நவிர்—ஆண்மயிர், மருதயாழ்த்திறம், வாள். ந.
நாஞ்சில்—மதிலுறுப்பு, கலப்பை. உ. கவிகை—குடை, கொடை. உ
கடிப்பம்—காதணி, ஆபரணச்செப்பு. உ.

மா—வண்டு, பெருமை, பா, குதிரை, அழைத்தல், வெறுப்பு, விலங்கின்பொது, செல்வம், கருநிறம், திருமகள். ௰.
கோ—கண், பசு, நீர், திசை, வச்சிராயுதம், ஆகாயம், கிரணம், பூமி, அம்பு, சொல், தேவலோகம், அரசன், இரங்கல், மலை. கச.

ஆவி—குளம், வாசனை, உயிர், புகை, உயிர்ப்பு. ரு.
கூவிரம்—தேர், தேர்க்கொடிஞ்சி. உ. குவடு—மலை, மலையினுச்சி. உ
காவி—கருங்குவளை, காவிக்கல், கள். ந.
நாவிதன்—மயிர்களைவோன், கார்த்திகைநட்சத்திரம், பூரநட்சத்திரம்

ஆ—இரக்கம், பசு, ஆச்சாமரம், இசை, அதிசயம். ரு.
கா—துலை, சோலை, காத்தல், தோட்சுமை. ச.
பா—பஞ்சிநூல், வெண்பாமுதலியபா, பாவுதல், பரப்பு. ச.
தா—பகை, துன்பம், தாண்டுதல், வலிமை, கேடு. ரு.

கவ்வை—பழிச்சொல், வருத்தம், கள், ஒலி, எள்ளிளங்காய். ரு.
பவ்வம்—நீர்க்குமிழி, கடல், மரக்கணு, பௌர்ணிமை. ச.
தவ்வை—தமக்கை, தாய், மூதேவி. ந.
நவ்வி—தோணி, மான். உ. நன்று—பெருமை, நன்மை. உ.

அவல்—சிற்றுண்டி, பள்ளம், குளம். ந.
செவிலி—வளர்த்ததாய், முன்பிறந்தாள். உ. கவுடம்—ஓர்கொடி, ஓர் தேசம். உ.
கவடு—வச்சிராங்கி, ஓர்நெல்விலக்கம். உ. சுபம்—அழகு, வெண்மை

பவம்—பிறப்பு, பாவம். உ. பாவம்—தீவினை, தியானம். உ.
சவுரியம்—களவு, வீரம். உ. தண்மை—குளிர்ச்சி, தாழ்வு. உ.
யவம்—ஓர்வகைத்தானியம், நெல். உ.
யவனர்—சோனகர், கம்மாளர், சித்திரகாரர். ந.

ஆவரணந்தான்சட்டைதடைமறைப்பரணமாடை
ஏவலேவியங்கோளென்பவெய்தியவறுமைக்கும்பேர்
ஓவியர்சிறப்புநூலோரொடுசித்திரகாரரும்பேர்
ஓவிரக்கச்சொனீக்கமோடுநீர்தலைகபாடம்.

அவ்வையேதாயின்பேருமௌவையோடிருபேராமே
செவ்வியேர்பொழுதினோடுசெப்பியபருவமாகும்
தெவ்வமர்பகையிரண்டாந்தீவினைகொம்மைபாவம்
சைவமோர்புராணமீசன்சமயத்தின்விகற்பமாமே.

வகரவெதுகை முற்றிற்று.

ஆ_ விருத்தம் - ௨௪௭.

# ழகரவெதுகை.

விழவென்பமிதுனராசிவிளங்குமுற்சவமுமாகும்
கழையென்பபுணர்தமூங்கில்கரும்பெனவிருப்புமூப்பேர்
கழல்கழங்கொடுசெருப்புக்காலணிகாலிந்நாற்பேர்
கிழமைமூப்புரிமைபண்பாங்கிழிகிழிப்பொதிகீறுமே.

சூழியேசுனையும்வெய்யதும்பியின்முகபடாமும்
பாழியேவலிவிலங்கின்படுக்கையூர்பற்றிலாரூர்
காழியேயளக்குநாழிநாழிகைபூரட்டாதி
ஆழிமோதிரமேநேமியலைகடல்கரையேவட்டம்.

இழுமெனலோசையென்பவினிமையுமியம்புமப்பேர்
விழுமமேசிறப்புச்சீர்மையிடும்பையும்விதித்தபேரே
தொழுவென்பதுழலைதானேயிரேவதிநாளுஞ்சொல்லும்
செழுமையேவளங்கொழுப்பாந்தேனென்பநறவும்வண்டும்.

கழுதுபேய்பரண்வண்டென்பகயவுகீழ்பெருமைமென்மை
அழுவமேபரப்புநாடுமழுங்கலேயிரங்கல்கேடாம்
கழுமல்பற்றுமயக்கங்காதலேயாசைகோறல்
கழிதலென்பதுவேசாதல்கடந்திடன்மிகுதிமுப்பேர்.

மாழைபொன்னுலோகக்கட்டிமடமையேர்புளிமாவோலை
கூழையேசிறகுமாதர்கூந்தல்வெம்படையுறுப்பாம்
தாழைகேதகைதெங்காகுஞ்சாகினிசேம்புகீரை
ஊழ்முறைவெயில்பகைப்பேரூசியேயூசியாணி.

ஆவரணமென்பது—சட்டை, தடுத்தல், மறைப்பு, கோட்டை, வஸ்திரம். ரு.
ஏவல்—வியங்கோள், தரித்திரம். உ.
ஓவியர்—சிற்பாசாரியர், சித்திரகாரர். உ.
ஓ—இரக்கச்சொல், நீங்குதல், மடையடைக்குங்கதவு. ங.

அவ்வை—தாய், ஔவையார். உ.
செவ்வி—அழகு, காலம், பருவம். ங.
தெவ்—போர், பகை. உ. தீவினை—கொடுமை, பாவம். உ.
சைவம்—ஓர்புராணம், உட்சமயங்களாறனுளொன்று. உ.



# ழகரவெதுகை.

விழவென்பது—மிதுனராசி, திருவிழா. உ.
கழை—புனர்பூசநட்சத்திரம், மூங்கில், கரும்பு. ங.
கழல்—கழற்காய், செருப்பு, காலணி, கால். ச.
கிழமை—முதுமை, உரிமை, குணம். உ. கிழி—நிதிப்பொதி, கீறு. உ.

குழி—சுனை, யானைமுகபடாம். உ.
பாழி—வலிமை, விலங்கின்படுக்கை, ஊர், பகைவரூர். ச.
நாழி—அளக்குநாழி, நாழிகை, பூரட்டாதிநட்சத்திரம். ங.
ஆழி—மோதிரம், சக்கராயுதம், கடல், கடற்கரை, வட்டம். ரு.

இழுமெனல்—அநுகரணவோசை, இனிமை. உ.
விழுமம்—சிறப்பு, சீர்மை, துன்பம். ங.
தொழு—தொழுமரம், இரேவதிநட்சத்திரம். உ.
செழுமை—வளமை, கொழுப்பு. உ. தேன்—கள், வண்டு. உ.

கழுது—பேய், பரண், வண்டு. ங. கயவு-கீழ்மை, பெருமை, மென்மை
அழுவம்—பரப்பு, நாடு. உ. அழுங்கல்—இரங்கல், கேடு. உ.
கழுமல்—பற்றுதல், மயக்கம். உ. காதல்—ஆசை, கொல்லுதல். உ.
கழிதல்—சாதல், கடத்தல், மிகுதி. ங.

மாழை—பொன், உலோகக்கட்டி, அறிவின்மை, அழகு, புளிமா, ஓலை
குழை—சிறகு, பெண்மயிர், படையுறுப்பு. ங.
தாழை—தாழை, தென்னமரம். உ. சாகினி—சேம்பு, சிறுகீரை. உ.
ஊழ்—முறை, வெய்யில், பகை. ங. ஊசி—குசி, எழுத்தாணி. உ.

உழையென்பதிடமான்யாழினோர்நரம்பிற்கும்பேராம்
குழையென்பதளிர்துவாரங்குண்டலஞ்சேறுநாற்பேர்
விழைவென்பபுணர்ச்சிகாதல்வெறுக்கையென்பதுபொன்செல்வ
வழிமரபிடம்பின்மார்க்கம்வழங்கலேகொடையுலாவல். (௩

ஈழம்பொன்கள்ளோர்தேசமெல்லையேயளவைவெய்யோன்
மேழகங்கவசமாடாம்வேளாண்மைகொடையேமெய்ம்மை
காழியர்வண்ணாருப்புவாணிகரிருபேர்காட்டும்
வேழமேகரும்பியானைகொறுக்கைச்சிவேணுநாற்பேர். (௪

கூழென்பதுணவும்பொன்னும்பயிரென்றுங்கூறுமுப்பேர்
காழென்பமணியின்கோவைகற்பரல்சேகுவித்தாம்
யாழென்பமிதுனம்வீணையிரலைநாளாதிரைப்பேர்
கீழென்பதிடங்கீழ்சாதிகீழ்த்திசைகயமைநாற்பேர். (௫

கோழியேகுருகோழூராங்குய்யமேமறைவுயோனி
மூழியேவாவிசோறேடகப்பையுமொழியுமுப்பேர்
மூழையேயகப்பைசோறுமுறஞ்சுளகொடுவிசாகம்
நூழிலேகோறல்யானைநுண்கொடிகொடிக்கொத்தான்பேர். (௬

தொழுதிபுள்ளொலிகூட்டப்பேர்தொறுநிரையடிமைகூட்டம்
கெழுவுதன்மயக்கம்பற்றுங்கிலாலங்கறைநீர்காடி
குழறுநோயுடைப்பொருட்பேர்மயிரிசைக்குழன்முப்பேரே
அழிவென்பவீதல்கேடாமவிநெய்சோறமருண்டி. (௭

ழகரவெதுகை முற்றிற்று.

ஆ விருத்தம் - ௨௱௭.

---

# ளகரவெதுகை.

குளநுதல்கரும்பின்கட்டிகுட்டமுமிட்டநாமம்
களமமர்க்களமேகண்டங்களாவிடங்கறுப்பேயில்லாள்
வளமைமாட்சிமைகொழுப்பாம்வாருணங்கட்டுமேற்கும்
விளவென்பகமர்விளாவாம்விம்மலேங்குதலொலித்தல்.

முளரியேவிறகுசெந்தீமுண்டகஞ்சிறுமைகாடாம்
விளரென்பதிளமைதானேவெளுப்பொடுகொழுப்புமாகும்
களபமேயானைக்கன்றுகமழ்சாந்துகலவைமுப்பேர்
உளர்தலேசிதறலாகுந்தடவலுமுளரக்கற்பாற்றே.

உழையென்பது—இடம், மான், யாழிரேணர்கரம்பு. ௩.
குழை—தளிர், துவாரம், குண்டலம், சேறு.௪. விழைவு—புணர்ச்சி,
ஆசை. ௨.
வெறுக்கை—பொன், செல்வம்.௨. வழி—பழமை, இடம்,பின்,வழி.
வழங்கல்—கொடுத்தல், உலாவல். ௨.

ஈழம்—பொன், கள், சிங்களதேசம். ௩. எல்லை—அளவு, சூரியன்.௨
மேழகம்—கவசம், ஆடு. ௨. வேளாண்மை—கொடை, உண்மை.௨.
காழியர்—வண்ணார், உப்புவாணிகர். ௨.
வேழம்—கரும்பு, யானை, கொறுக்கை, மூங்கில். ௪.

கூழ்—உணவு, பொன், பயிர். ௩.
காழ்—மணிவடம், பருக்கைக்கல், மரவயிரம், விதை. ௪.
யாழ்—மிதுனராசி, வீணை, அச்சுவினிநட்சத்திரம், திருவாதிரைந
ட்சத்திரம். ௪. கீழ்—இடம், கீழ்சாதி, கிழக்கு, கீழ்மை. ௪.

கோழி—கோழி, உறையூர். ௨. குய்யம்—மறைவு, பெண்குறி. ௨.
மூழி—குளம், சோறு, அகப்பை.௩. மூழை—அகப்பை, சோறு.௨.
முறம்—சுளகு, விசாகநட்சத்திரம். ௨.
நூழில்—கொல்லல், யானை, படர்கொடி, கொடிக்கொத்தான். ௪.

தொழுதி—பறவையினொலி, கூட்டம், [பறவைக்கூட்டம்.] ௨.
தொறு—பசுக்கூட்டம்,அடிமை, கூட்டம். ௩. கெழுவுதல்-மயக்கம்,
பற்று. ௨. ஙிலாலம்—இரத்தம், நீர், காடி. ௩.
குழல்—துளையுடைப்பொருள், மயிர், இசைக்குழல். ௩.
அழிவு—சாதல், கேடு. ௨. அவி—நெய், சோறு, தேவருணவு. ௩.

---

# ளகரவெதுகை.

குளமென்பது—நெற்றி, சர்க்கரை, தடாகம். ௩.
களம்—போர்க்களம், கழுத்து, களாச்செடி,நஞ்சு, கறுப்பு, மனைவி.
வளமை—மாட்சிமை, கொழுப்பு. ௨. வாருணம்—கடல், மேற்கு.௨
விளவு—நிலப்பிளவு, விளாமரம். ௨. விம்மல்—அழுதல், ஒலித்தல்.

முளரி—விறகு, நெருப்பு, தாமரை, நுண்மை, காடு. ௫.
விளர்—இளமை, வெண்மை, கொழுப்பு. ௩.
களபம்—யானைக்கன்று, சாந்து, கலவைச்சாந்து. ௩.
உளர்தல்—சிந்தல், தடவல். ௨.

குளிர்மழுநண்டிருத்தல்குளிர்கவண்மூழாமீன்றுரை
நளிர்குளிர்பெருமைஞெண்கோட்டியசெறிவுநாற்பேர்
ஓளிவட்டந்தான்கண்ணாடிசக்கரமிருபேரோதும்
இளியிசையிசித்தலெல்லையிணங்குதலுரித்தற்கும்பேர். (௩)

பளிதமென்பதுகர்ப்பூரம்பல்லமெங்கணக்குமாகும்
வெளிலணில்வேழத்தம்பம்வெண்டயிர்கடைதறிப்பேர்
களிறென்பவத்தகாளேகறையடிசுறவுபன்றி
ஒளியிருட்டேரேதீயேயொளிப்பிடம்புகழுமாமே. (௪)

பாளிதஞ்சோறுகண்டசருக்கரைகுழம்புபட்டாம்
ஓளியேயானைக்கூடமொழுங்கென்றும்வழங்குநூலே
கோளிதொன்மரமேயத்திகொள்வோனுங்கொழிஞ்சியும்பேர்
மீளிதிண்ணியன்வலிப்பேர்மேன்மகன்பெருமைக்கும்பேர். (௫)

அளைதயிர்முழைபுற்றுக்குமசணியேயுருமுவச்சிரம்
உளைபரிமீதுகட்டுமயிர்பிறமயிருமோதும்
கிளையென்பதோர்பண்ணுமூங்கில்கேளொடுகிளைத்தலும்பேர்
இளைபுயல்விளைமைவேலிதலைக்காவலிவைநாற்பேரே. (௬)

உள்ளலேநினைவுள்ளான்பேருமுப்பெண்பலவியுற்சாகம்
ஞெள்ளலேபள்ளமென்மைநீண்டவீதியுமுப்பேரே
எள்ளலேநகையிழிப்பாம்யாமந்தெற்கிரவுசாமம்
ஞொள்கல்சோம்பிளைத்தலச்சக்குறிப்பென்றுநுவலற்பாலாம். (௭)

வள்ளென்பகாதுகூர்மைவலிவளம்வாளேவாராம்
வெள்ளையேமுசலிசங்குவெளிறுவெள்ளாடுவெண்பா
கள்வனேமுசுஞெண்டியானைகருநிறத்தவனேசோரன்
பள்ளியூர்சிற்றூர்கோயில்பாயல்கண்படைநீத்தோரூர். (௮)

விளக்கொளிசோதிநாளாம்வேள்வியேமகநாரிதல்
அளக்கரேபுடவிசேறுப்பளங்கடல்கார்த்திகைப்பேர்
திளைத்தலேயனுபவித்தல்செறிதலேநிறைதன்முப்பேர்
இளைத்தலேயிளைப்பிரங்கலென்றாமேழியிரவிவெய்யில். (௯)

பிள்ளையேவடுகன்காக்கைபெட்டருன்விரும்பல்வேண்டல்
மன்னரேமன்னர்வீரர்மறவர்க்குங்குறவர்க்கும்பேர்
உள்ளமேமுயற்சிநெஞ்சாமுஞற்றிழுக்கொடுதோளாண்மை
வள்ளியேவல்லிசெங்கைவளைபுனையிழைமுப்பேரே. (௧௦)

குளிரென்பது—மழுப்படை, நண்டு, தங்குதல், குளிர்ச்சி, கவண், முழவு, மீனெழுங்கு. எ. நளிர்—குளிர்ச்சி, பெருமை, நண்டு, நெருக்கம். ச. ஒளிவட்டம்—கண்ணாடி, சக்கராயுதம். உ.
இளி—ஏழிசையினொன்று, இசித்தல், இகழ்ச்சிக்குறிப்பு, இணங்குதல், உசித்தல். ரு.

பளிதம்—கருப்பூரம், பல்லமென்னுமோரெண். உ.
வெளில்—அணில், யானைத்தூண், தயிர்கடைதறி. ௩.
களிறு—அத்தநட்சத்திரம், யானை, சுறு, பன்றி. ச.
ஒளி—சூரியன், சந்திரன், நெருப்பு, ஒளிப்பிடம், புகழ். ரு.
பாளிதம்—சோறு, கண்டசர்க்கரை, குழம்பு, பட்டுவர்க்கம். ச.
ஓளி—யானைக்கூடம், ஒழுங்கு. உ.
கோளி—ஆலமரம், அத்திமரம், கொள்வோன், பூவாதுகாய்க்குமரம்.
மீளி—திண்ணியன், வலிமை, மேன்மையுள்ளோன், பெருமை. ச.

அளை—தயிர், மலைக்குகை, புற்று. ௩.
அசனி—இடி, வச்சிராயுதம். உ. உளை—குதிரையிற்கட்டுமயிர், பிறமயிர். உ. கிளை—ஓர்பண், மூங்கில், உறவு, கிளைத்தல். ச.
இளை—மேகம், இளமை, வேலி, தலைக்காவல். ச.

உள்ளல்-நினைத்தல்,உள்ளான்குருவி.உ. உழப்பு-வலிமை,உற்சாகம்.
ஞெள்ளல்—பள்ளம்,மேன்மை,வீதி.௩. எள்ளல்-நகைப்பு,இகழ்ச்சி.
யாமம்—தென்றிசை, இரா, சாமம். ௩.
ஞொள்கல்—சோம்பல், இளைத்தல், அச்சக்குறிப்பு. ௩.

வள்—காது, கூர்மை, வலிமை, வளம், வாள், வார். சு.
வெள்ளை—பலபத்திரன், சங்கு, வெண்மை, வெள்ளாடு, வெண்பா.
கள்வன்—முசு, நண்டு, யானை, கரியன், திருடன். ரு.
பள்ளி—மருதநிலத்தூர், சிற்றூர், கோயில், மக்கட்படுக்கை, நித்திரை, முனிவரிருப்பிடம். சு.

விளக்கு—தீபம், சோதிநட்சத்திரம். உ. வேள்வி—யாகம், மகநட்சத்திரம், கொடை. ௩.
அளக்கர்—பூமி, சேறு, உப்பளம், கடல், கார்த்திகைநட்சத்திரம்ரு
திளைத்தல்—அனுபவித்தல், நெருங்கல், நிறைதல். ௩.
இளைத்தல்—மெலிவு, இரங்கல். உ. என்றூழ்—சூரியன், வெய்யில்.

பிள்ளை—வைரவக்கடவுள், காக்கை. உ. பெட்டல்—விரும்பல், வேட்கைப்பெருக்கம். உ.
மள்ளர்—உழவர், படைவீரர், திண்ணியர், குறிஞ்சிநிலமாக்கள். ச.
உள்ளம்—முயற்சி, மனம். உ. உஞற்று—இழுக்கு, முயற்சி. உ.
வள்ளி—படர்கொடி, கைவளை, ஆபரணம். ௩.

காளமேயூதுகொம்புகழுநஞ்சுகருமைநாற்பேர்
வேளாறுமுகன்காமன்பேர்விபூதியூண்கொடுமைசெல்வம்
கோளிடையூறென்பான்கோள்கொலைகுணம்வலிபொய்கொள்கை
ஞாளியேசுணங்கன்கள்ளாநான்முகனருகன்வேதா. (கக)

களரென்பமிடறுகோட்டிகளர்நிலங்கருமைநாற்பேர்
தளம்பிலைபடையேசாந்துதாழிபூவிதழேமேடை
அளகமேமாதரோதியறன்மயிர்க்குழற்சிமுப்பேர்
தளைவிலங்கொடுதொடர்ச்சிதொட்சிலம்பாண்மயிர்ப்பேர். (கஉ)

பள்ளுவண்டவிட்டம்புட்பேர்புளகந்தாப்பணங்குமிழ்ப்பாம்
கள்ளென்பகளவுகள்ளாங்களைவிழியிரவிபன்றி
அள்ளுறாஞ்செறிவுகாதோடயிலும்பற்றிருப்புமாகும்
வெள்ளமெண்பிருதிமுந்நீர்வேறுவேழமல்லிவியாள். (கங)

வாளென்பவொளிகட்கப்பேர்வல்லரிதளிர்வெபங்காயம்
கூளிபேய்தமரேறுசுருதன்படைத்தலையன்கூட்டம்
தோளென்பபுயங்கையாகுஞ்சுந்தரியமையேசண்டன்
தேளென்பதனுடநாளேவிருச்சிகந்தெறுக்காலும்பேர். (கச)

அளியென்பநறவும்வண்டுமன்போடுகொடையுநாற்பேர்
அளவையேயெல்லைநாளாமாசாரந்துகிறுமாரி
விளரியேயிளமையாழிலோர்நரம்பியாழ்நிணம்வேட்கை
வளையென்பபதவியும்பல்லண்டமும்வளைப்புமாகும். (கரு)

வள்ளமேமரக்கால்வட்டில்கடிகைவட்டிற்குமப்பேர்
வள்ளுரம்பசுவிறைச்சியரைக்குழுண்பொதுவுமாகும்
அள்ளலேநரகஞ்சேறுமம்புநீர்புயல்வெப்போயாம்
வெள்ளிலேவிளாப்பாடைப்பேர்வேலம்வேள்வெறியாட்டாளன்.

காளையேயெருதுபாலைக்கதிபனல்லிளமையோன்பேர்
கூளியர்நண்பர்பூதகணவீரர்கொலைதிறத்தோர்
கோளகைவட்டமோடுமண்டலியிப்பாம்புங்கூறும்
கேள்வியேசெவிகல்விப்பேர்கிடங்ககழ்வாவியாமே. (கஎ)

இளமையேதண்மைகாமமிளமையின்பருவமுப்பேர்
அளறென்பநரகஞ்சேறுமக்காரய்புடைவைவெல்லம்
கிளரென்பகிரணத்தோடுகிளர்கோட்டுமலர்ப்பூந்தாதாம்
களரிபோர்க்களங்காடென்பகருமஞ்செய்யிடமுமாமே. (கஅ

ளகரவெதுகைமுற்றிற்று.

ஆக விருத்தம் - உஎரு.

காளமென்பது—ஊதுகொம்பு, சூலம், நஞ்சு, கறுப்பு. ச.
வேள்—குமாரக்கடவுள், மன்மதன். உ. விபூதி— * தசை, பொல்லாங்கு, செல்வம். ௩.
கோள்—இடையூறு,நவக்கிரகம்,கொலை,குணம்,வலிமை,பொய்,கொள்ளல். எ.ஞாளி—நாய்,கள். உ. நான்முகன்-அருகன்,பிரமன்.
களர்—கழுத்து, கூட்டம், களர்நிலம், கறுப்பு. ச.
தளம்—இலை, சேனை, சாந்து, சாடி, பூவிதழ், உபரிகை. சு.
அளகம்—பெண்மயிர், நீர், மயிர்க்குழற்சி. ௩.
தளை—விலங்கு, தொடர்பு, சிலம்பு, ஆண்மயிர். ச.
புள்—வண்டு, அவிட்டநட்சத்திரம், பறவை. ௩.
புளகம்—கண்ணாடி, மயிர்சிலிர்த்தல். உ.
கள்—களவு, கள். உ. கனலி—நெருப்பு, சூரியன், பன்றி. ௩.
அள்—வலிமை, நெருக்கம், காது, கூர்மை, பற்றிரும்பு. ரு.
வெள்ளம்—ஓரெண், மிகுதி, கடல். ௩. வேணு-மூங்கில்,வில்,வாள்.
வாள்—ஒளி, வாளாயுதம். உ. வல்லரி—தளிர், பசுங்காய். உ.
கூளி—பேய், உறவு, எருது,குற்றம்,பூதம்,படைத்தலைவன்,கூட்டம்.
தோள்—புயம், கை. உ. சுந்தரி—துர்க்கை, † மூஞ்சூறு. உ.
தேள்—அனுடநட்சத்திரம், விருச்சிகராசி, தேள். ௩.
அளி—கள், வண்டு, அன்பு, கொடை. ச.
அளவை—எல்லை, நாள். உ. ஆசாரம்—சீலை, தூய்மை,பெருமழை.
விளரி—இளமை,யாழிலோர்நரம்பு,நெய்தனிலத்தியாழ், வேட்கைப்பெருக்கம். ச. வளம்—பதவி, பலபண்டம், அழகு. ௩.
வள்ளம்—மரக்கால், வட்டில், நாழிகைவட்டில். ௩.
வள்ளுரம்-பசுவினிறைச்சி,தசைப்பொது.உ. அள்ளல்-நரகம்,சேறு.
அம்பு—நீர், மேகம், மூங்கில், பாணம். ச.
வெள்ளில்—விளாமரம், பாடை. உ. வேலன்—முருகக்கடவுள்,வெறியாட்டாளன். உ.
காளை—எருது, பாலைநிலத்தலைவன், கட்டிளமையோன். ௩.
கூளியர்—சினேகர், பூதகணவீரர், கொலையாளிகள். ௩.
கோளகை—வட்டம், மண்டலிப்பாம்பு. உ.
கேள்வி—காது, கல்வி. உ. கிடங்கு—அகழ், வாவி. உ.
இளமை—தாழ்மை, காமம், இளமைப்பருவம். ௩.
அளறு—நரகம், சேறு. உ. அக்காரம்—புடைவை, வெல்லம். உ.
கிளர்—ஒளி, பூந்தாது. உ.
களரி—போர்க்களம், காடு, தொழில்செய்யிடம். ௩.

---

* பூதி -தசை. † சுசுந்தரி - மூஞ்சூறு.

# றகரவெதுகை.

இறைவையேபுட்டிலேணியென்பகூர்மிகுதிகூர்மை
குறடென்பபலகைதிண்ணைகொண்மூவென்பதுவிண்மேகம்
புறவமோர்புள்ளுங்காடுமுல்லைநன்னிலனும்போற்றும்
புறணியேகுறிஞ்சிமுல்லைநிலத்தொடுபுறமுந்தோலும். (௧)

மறஞ்சினம்பிணக்குக்கூற்றுமலைந்தசேவகமுமாகும்
குறிஞ்சியோரிசையோர்பண்ணேகுறிஞ்சிசெம்முள்ளிக்கும்பேர்
பிறங்கலேமிகுதிவெற்புநிறைவொலிபெருமையைம்பேர்
குறும்பொறைகுன்றுகாடுகுறிஞ்சிநன்னிலத்தூர்முப்பேர். (௨)

தாறுவிற்குதையேயெல்லைதாழ்மரக்குலைமுட்கோலாம்
சேறென்பகும்பிசாந்தித்திப்புவிழவுகள்ளே
ஊறென்பதீமைதீண்டலுயிர்க்கொலையிடையூறென்ப
ஏறிடிமுதலாளாகுமிடபமோடெருதுமட்பேர். (௩)

சிறையேவேறிடமாம்புள்ளின்சிறகொடுகாவலும்பேர்
கறையிறுத்திடலிரத்தங்கறுப்புநல்விடம்பேரைந்தே
முறையென்பகோசமேழுமுறைமையிம்முப்பேரென்ப
பிறழ்தலேநடுக்கம்வேறுபெயர்தலோடாளிவிடற்பேர். (௪)

ஏற்றலேகோடலென்பவெதிர்ந்துபோர்செய்தலும்பேர்
ஆற்றலேபொறைமுயற்சியதிகமேவலியேஞானம்
தோற்றலேவலிபிறப்புத்தோன்றுதல்புகழேநாற்பேர்
போற்றலேபுகழ்தலோம்பல்புறமென்பமுதுகுவீரம். (௫)

அற்றமேமறைவுஞ்சோர்வுமவகாசந்தானுமாகும்
குற்றல்குற்றுதல்பறித்தல்குறையென்பதிடைச்சொலோசை
எற்றென்பதிரக்கமொத்தலெறிதலெத்தன்மைத்தென்றல்
கொற்றியேதுர்க்கைநாமங்கோவிளங்கன்றுங்கூறும். (௬)

உறழ்வென்ப *புணர்வுகாலஞ்செறிவிடையீடொப்பைம்பேர்
உறவியேயெறும்புநீற்றுலைக்களமுறவுயிர்ப்பேர்
உறுகணென்பதுவேதுன்பமுறுபயமிடிநோய்நாற்பேர்
உறுவனேமுனிபுத்தன்பேருலக்கையேயுரோங்கலோணம். (௭)

விறப்பென்பசெறிவுவெற்றிவெருவுதல்பொருதனாற்பேர்
பொறுத்தலேபொறைதாங்கற்பேர்புந்திதான்புதனேபுத்தி
இறுத்தலேயொடித்தறங்கலியம்புதன்முப்பேரென்ப
கறுப்பிருள்சினக்குறிப்பாங்கன்றுகைவளைகன்றுமே. (௮)

---

* உணர்வு என்றும் பாடம்.

# றகரவெதுகை.



இறைவையென்பது—கூடை, ஏணி. உ. கூர்—மிகுதி, கூர்மை. உ.
குறடு—பலகை, திண்ணை. உ. கொண்மூ—ஆகாயம், மேகம். உ.
புறவம்—ஓர்பறவை, காடு, முல்லைநிலம். ௩.
புறணி—குறிஞ்சிநிலம், முல்லைநிலம், புறம், தோல். ௪.

மறம்—கோபம், பிணக்கு, யமன், வீரம். ௪.
குறிஞ்சி—ஓரிசை, ஓர்பண், குறிஞ்சிநிலம், செம்முள்ளி. ௪.
பிறங்கல்—மிகுதி, மலை, நிறைவு, ஒலி, பெருமை. ௫.
குறும்பொறை—மலை, காடு, குறிஞ்சிநிலத்தூர். ௩.

தாறு—விற்குதை, அளவு, மரக்குலை, முட்கோல். ௪.
சேறு—சேறு, சாரம், இனிமை, திருவிழா, கள். ௫.
ஊறு—தீமை, தொடுதல், கொலை, இடையூறு. ௪.
ஏறு—இடி, அச்சுவினிநட்சத்திரம், இடபராசி, எருது. ௪.

சிறை—வேறிடம், பறவையினிறகு, காவல். ௩.
கறை—குடியிறை, இரத்தம், கறுப்பு, உரல், நஞ்சு. ௫.
முறை—புத்தகம், ஊழ், முறைமை. ௩.
பிறழ்தல்—நடுக்கம், வேறுதல், ஒளிசெய்தல். ௩.

ஏற்றல்—கொள்ளல், எதிர்த்துப்போர்செய்தல். உ.
ஆற்றல்—பொறை, முயற்சி, மிகுதி, வலிமை, ஞானம். ௫.
தோற்றல்—வலிமை, பிறத்தல், தோன்றுதல், புகழ். ௪.
போற்றல்—புகழ்தல், பாதுகாத்தல். உ. புறம்—முதுகு, வீரம். உ.

அற்றம்—மறைவு, சோர்வு, சமயம். ௩.
குற்றல்—குற்றுதல், பறித்தல். உ. குறை—இடைச்சொல், ஒலி. உ.
எற்று—இரக்கக்குறிப்பு, அடித்தல்,எறிதல்,எத்தன்மைத்தென்றல். ௪.
கொற்றி—துர்க்கை, பசுவினிளங்கன்று. உ.

உறழ்வு—புணர்ச்சி, காலம், நெருக்கம், இடையீடு, உவமை. ௫.
உறவி—எறும்பு, ஊற்று, உலைக்களம், உறவு, உயிர். ௫.
உறுகண்—துன்பம், அச்சம், தரித்திரம், வியாதி. ௪.
உறுவன்—முனிவன், அருகன். உ. உலக்கை—உலக்கை, திருவோ
 ணநட்சத்திரம். உ.

விறப்பு—நெருக்கம், வெற்றி, அச்சம், போர். ௪.
பொறுத்தல்—பொறுமை, சுமத்தல். உ. புந்தி—புதன், புத்தி. உ.
இறுத்தல்—ஒடித்தல், தங்குதல், சொல்லுதல். ௩.
கறுப்பு—கருமை, கோபக்குறிப்பு. உ. கன்று—கைவளை, கன்று. உ.

பொறிமரக்கலமேசெல்வம்பூமகளெந்திரங்கள்
அறிவிலாஞ்சனையெழுத்தோடைம்பொறிவரியொன்பான்பேர்
வெறிவெருவுதல்கலக்கம்வெறியாட்டுவெட்டநாற்றம்
குறியபேய்துருவைகளுக்கூறுகோயொன்பதாமே. (௯)

உறைபொருண்மருந்துவாழ்நாளுணவுவெண்கலமேகாரம்
எறிபடைக்கலத்தின்கூட்டேயெண்குறித்திறுதிபெய்தல்
நறியபாற்பிரையிடைச்சொனகாரநீர்த்துளியீராறும்
அறைமுழைமோதல்பாறைநிரைசிற்றின்மொழியாறுமே. (௧௦)

இறைசிவன்கடவுள்வேந்தன்கையிறையிறப்பிறைசிறந்தோன்
சிறுமைபுள்ளிறகுதங்கல்சென்னிகூனிறப்பீராறே
உறையுளென்பதுநாரோமுறுதியேநன்மைகல்வி
பொறைமலைதுறுகல்பாரம்பொறைசுமைகருப்பம்பூமி. (௧௧)

இறும்புதாமரையின்பூவேமலைகுறுங்காடுமேற்கும்
இறும்பூதுதகைமைவெற்போடதிசயங்குழைதூறென்றும்
கறங்கலேசுழலலோசைகதிரென்பதிரவிசோதி
பறம்புயர்மலைமுலைப்பேர்பாய்மாவேகுதிரைவேங்கை. (௧௨)

கூற்றென்பதியமன்சொல்லாங்கோமானேமூத்தோன்பன்றி
காற்றநாறுதளேன்றற்பேர்நனைவென்பதகலந்தேற்றம்
ஊற்றென்பதூன்றுகோலுமுறவியுமிருபேரோதும்
கோற்றலேபொறைதவப்பேர்நுணங்கென்பநுண்மைதேமல். (௧௩)

கற்பமேபிரமன்வாழ்நாள்கற்பகதருசுவர்க்கம்
பொற்பென்பதழகினோடுபொலிவுமொப்பனையுமாகும்
பற்பமேபதுமந்தூளாம்பழங்கணேதுன்பமோசை
உற்கைதாரகைதீக்கொள்ளியுண்டிதான்புசித்தல்சோறே. (௧௪)

முற்றல்காழ்கோடன்மூப்புமுடிவுடன்வளைத்தலுற்பேர்
நெற்றியேநுதலின்பேருநெடும்படையுறுப்புமாகும்
கொற்றமேவன்மைவெற்றிகோவரசியன்மூப்பேரே
எற்றுதல்புடைத்தலோடேயெறிதலுமிருபேராமே. (௧௫)

அறுகென்பசிங்கமோர்புல்யாளியுமாகுமுப்பேர்
வறிதென்பதருகலேசற்றறியாமைபயனில்வார்த்தை
மறலியேமயக்கங்கூற்றாமறவிகண்மறதியீனம்
குறளென்பகுறளும்பேயுங்குறுமையுங்கூறுமுப்பேர். (௧௬)

பொறியென்பது—தோணி, செல்வம், இலக்குமி, எந்திரம், அறிவு, அடையாளம், எழுத்து, ஐம்பொறி, தேமல். கூ.
வெறி—அச்சம், கலக்கம், வெறியாட்டு, வட்டம், வாசனை, பேய், ஆடு, கள், வியாதி. கூ.

உறை—பொருள், மருந்து, வாழ்நாள், உணவு, வெண்கலம், காரம், ஆயுதவுறை, ஓரிலக்கக்குறிப்பு, பாலிடுபிரை, இடைச்சொல், நகரம், நீர்த்துளி. (கஉ)
அறை—மலைமுழை, மோதல், பாறை, திரை, சிற்றில், சொல். சு.

இறை—சிவன், கடன், அரசன், கையிறை, குடியிறை, உயர்ந்தோன், அற்பம், பறவையினிறகு, தங்கல், தலை, கூன், வீட்டிறப்பு. கஉ
உறையுள்—நாடு, ஊர்ப்பொது. உ. உறுதி—நன்மை, கல்வி. உ.
பொறை—மலை, துறகல், பாரம், பொறுமை, சுமை, கருப்பம், பூமி.

இறும்பு—தாமரைப்பூ, மலை, குறுங்காடு. ஙு.
இறும்பூது—பெருமை, மலை, அதிசயம், தளிர், சிறுதூறு. ரு.
கறங்கல்—சுழலல், ஒலி. உ. கதிர்—சூரியன், ஒளி. உ.
பறம்பு—மலை, முலை. உ. பாய்மா—குதிரை, புலி. உ.

கூற்று—யமன், சொல். உ. கோமான்—மூத்தோன், பன்றி. உ.
நாற்றம்—மணத்தல், தோன்றல். உ. நனவு—அகலம், தெளிவு. உ.
ஊற்று—ஊன்றுகோல், ஊற்று. உ. நோற்றல்—பொறுத்தல், தவஞ்செய்தல். உ. நுணங்கு—நுண்மை, தேமல். உ.

கற்பம்—பிரமன்வாழ்நாள், கற்பகவிருட்சம், தேவலோகம். ங.
பொற்பு—அழகு, பொலிவு, அலங்காரம். ங. பற்பம்—தாமரை, துகள்.
பழங்கண்—துன்பம், ஒலி. உ. உற்கை-விண்மீன், கடைக்கொள்ளி.
உண்டி—உண்ணல், சோறு. உ.

முற்றல்—வயிரங்கொள்ளல், மூப்பு, முற்றுப்பெறுதல், வளைத்தல். ச.
நெற்றி—நெற்றி, படையுறுப்பு. உ.
கொற்றம்—வலிமை, வெற்றி, அரசியல். ங.
எற்றுதல்—அடித்தல், எறிதல். உ.

அறுகு—சிங்கம், ஒருவகைப்புல், யாளி. ங.
வறிது—குறைதல், அற்பம், அறியாமை, பயனில்சொல். ச.
மறலி—மயக்கம், யமன். உ. மறவி—கள், மறதி, இழிவு. ங.
குறள்—வாமனம், பேய், குறுமை. ங.

விறலென்பவலிவென்றிப்பேர் விழைந்தோனைநண்பன்வேட்டோ
நொறிலென்பவிரைவினொடுதொடக்கமுமிருபேராமே [ன்
நெறிவழிநீதியென்பநிருமித்தல்படைப்பாராய்தல்
பறைபறைவசனந்தோபெறக்கும்புள்ளிறகுமூட்பேர். (கக)

றகரவெதுகை முற்றிற்று.

ஆக விருத்தம் - உகஉ.

---

# னகரவெதுகை.

மனவுநன்மணிசங்கக்காம்வரைமலையிறையேய்மட்டாய்
தனிதமியொப்பின்மைப்பேர்சாத்தமேகலையுஞ்சாத்தும்
முனைபகைநுனிவெறுப்பாமுனைவேயங்குரமேயின்னை
யினமிருங்கிளையமைச்சாமெழில்வண்ணமிளமைக்கும்பேர். (க)

ஆனகம்படகத்தின்பேராகுந்துஞ்சுதுயிலுப்பேர்
மானமேயளவிலச்சைவிமானமேபெருமைகுற்றம்
பானலேபழனநெய்தல்பாங்கரேயிடம்பக்கப்பேர்
மானவேமயக்கமொப்பாம்வருடமேமழையுமாகும். (உ)

தானமேமதநீராட்டுத்தருகொடைசுவர்க்கநாற்பேர்
பீனமேபருமைபாசிபேடென்பபேடியூரே
நானமேபூசும்பூச்சுநானமுங்குளிக்குநீரும்
வானமாநாயமென்பமழையுலர்மரமுமாமே. (ங)

வானிமேற்கட்டிசேனைவண்டுகிற்கொடியும்பேரே
ஆனியுத்தராடமூலஞ்சேதமோர்மாதமென்ப
ஏனையேயொழிபுமற்றையெனுமிடைச்சொற்குமப்பேர்
ஆனியம்பொழுதுநாளாமனந்தையோர்சத்திபூமி. (ச)

முன்னலேநினைவுநெஞ்சாமுன்னஞ்சீக்கிரியோடெண்ணம்
கன்னல்சர்க்கரைகரும்புகரகநாழிகைவட்டிற்பேர்
மன்னனுத்தராட்டாதிப்பேர்மன்னவன்றானுமாகும்
இன்னரசீர்ப்புள்யாழாங்கிடக்கைபூதலம்பரியற்பேர். (ரு)

பின்னையேபின்றைதங்கைபெரியமாற்குரியதேவி
கொன்பயனிலாமைகாலங்கூறியபெருமையச்சம்
பொன்னென்பவனப்பிரும்புபூமகள்வியாழநாற்பேர்
மன்னிலைமிகுதிவேந்தேவாழிவாழ்கெனவிடைச்சொல். (சா)

விறலென்பது—வலிமை, வெற்றி. உ. விழைக்தோன்—சிநேகன், கணவன். உ.
நொறில்—விரைவு, நடக்கம்.உ. நெறி—வழி, நீதி. உ.
நிருமித்தல்—சிருட்டித்தல், ஆராய்தல். உ.
பறை—வாச்சியம், சொல், பறவையினிறகு. ௩.

---

# னகரவெதுகை.

---

மனவென்பது—மணிப்பொது, சங்கு, அக்குமணி. ௩.
வரை—மலை, கையிறை, மூங்கில், அளவு. ச. தனி—தனிமை,ஒப்பின்மை. உ. சாந்தம்—பொறுமை, சந்தனம். உ.
முனை-புகை,நுனி,வெறுப்பு. ௩. முளை-மூங்கில்,அங்குரம்,மகன்.௩.
இனம்—சுற்றம், மந்திரி. உ. எழில்—அழகு, இளமை. உ.

ஆனகம்—படகம்,துந்துபி. உ. மானம்—அளவு,வெட்கம்,விமானம், பெருமை, குற்றம். ரு.
பானல்—வயல், நெய்தல். உ. பாங்கர்—இடம், பக்கம். உ.
மானல்—மயக்கம், ஒப்பு. உ. வருடம்—மழை, ஆண்டு. உ.

தானம்—யானைமதம், நீராடல், கொடுத்தல், தேவலோகம். ச.
பீனம்—பருமை, பாசி. உ. பேடு—அலி, ஊர். உ.
நானம்—பூசும்பூச்சு, கஸ்தூரி, குளிக்குநீர். ௩.
வானம்—ஆகாயம், மழை, உலர்ந்தமரம். ௩.

வானி—மேற்கட்டி, சேனை, துகிற்கொடி. ௩.
ஆனி—உத்தராடநட்சத்திரம்,மூலநட்சத்திரம்,கேடு,ஆனிமாசம்.ச.
ஏனை—ஒழிபு, மற்றையென்னுமிடைச்சொல். உ.
ஆனியம்—காலம், நாள். உ. அனந்தை—ஓர்சத்தி, பூமி. உ.

முன்னல்—நினைவு, நெஞ்சு. உ. முன்னம்—சீக்கிரமரம், எண்ணம்.
கன்னல்—சருக்கரை, கரும்பு, கரகம், நாழிகை, நாழிகைவட்டில்.
மன்னன்—உத்தராட்டாதிநட்சத்திரம், அரசன். உ. கின்னரம்—நீர்வாழ்பறவை, வீணை. உ. கிடக்கை—பூமி, மக்கட்படுக்கை.உ.

பின்னை—பின்பு, தங்கை, இலக்குமி. ௩.
கொன்—பயனின்மை, காலம், பெருமை, அச்சம். ச.
பொன்—அழகு, இரும்பு, இலக்குமி, வியாழன். ச.
மன்—நிலை, மிகுதி, அரசன். ௩. வாழி-வாழ்கெனல்,இடைச்சொல்.

வன்னியேபிரமசாரிவளர்கிளிசமிசெந்தீயாம்
சென்னிகம்பாணன்சோழன்சிருளியஞ்செம்பாகும்
கன்னிபெண்ணழிவிலாமைகட்டிளமைக்கும்பேரே
தென்னிசைவணப்புத்தாழைதெற்கொடுகெற்புமாமே. (௭)

குன்றுவேதண்டமாகுங்குறைவொடுசேதயமும்பேர்
அன்றிலோர்புள்ளுமூலநாளெனவாமிரண்டே
மன்றமேவெளியினுமம்வாசமம்பலமுமப்பேர்
மன்றலேபரிமளப்பேர்மருவுகல்யாணமும்பேர். (௮)

தனமுலைபொன்றன்கன்றுசந்தமுத்தனமைம்பேராம்
கனவுகித்திரைமையற்பேர்கலிங்கஞ்சாதகப்புள்ளாடை
கணைசெறிவொலியாமென்பகவரியேசவரிமேதி
பனுவலேகிளவிநூலாம்படப்பையூர்ப்புறமேதோட்டம். (௯)

அனந்தனேசிவன்மால்சேடனலாயுதனருகனைந்தே
அனந்தமேமுடிவிலாமையாடகம்விண்முப்பேரே
அனங்கமேயிருவாட்சிப்பேராகுமல்லிகைக்குமப்பேர்
தனஞ்சயன்பார்த்தனேசெந்தழலொருகாற்றுமாமே. (௧௦)

சானகிசீதைமூங்கிற்றனுவென்பதுடல்வில்லறபம்
சானுவேமலைமுழந்தாண்மலைப்பக்கந்தானுமாகும்
சோனையேயோணநாளும்விடாமழைசொரிதலும்பேர்
கானலேமலைச்சார்சோலைகடற்கரைச்சோலைபேய்த்தேர். (௧௧)

வானென்பவிசும்புமேகமழையொடுபெருமைநாற்பேர்
தானையேசேனையாடைபடைக்கலந்தானுமாகும்
கானந்தேரிசையேபேதைகாடுதற்பூடியைம்பேர்
ஏனலேசெந்திணைப்பேர்திணைப்புனமென்றுமாமே. (௧௨)

முனியென்பதியானைக்கன்றுமுனிவன்வில்லகத்திநாற்பேர்
துனியென்பபுலவிநீட்டந்துன்பநோயாறுகோபம்
பனியென்பநடுக்கந்துன்பம்பயங்குளிரிமமைம்பேரே
சினையென்பமுட்டைபீளாமரக்கொம்புஞ்செப்புமப்பேர். (௧௩)

மானேசாரங்கமாவின்பொதுவொடுமேகராசி
கானேநன்மணங்காடென்பகல்வியூர்க்குருவியாமை
ஏறுதிமஞ்சிகின்மந்திரியுந்தந்திரியுமென்ப
மீனேசித்திரைநாள்வான்மீன்மயிலையுமேவுமப்பேர். (௧௪)

வன்னியென்பது—பிரமசாரி, கிளி, வன்னிமரம், நெருப்பு. ௪.
சென்னி—தலை, பாணன், சோழன். ௩.
சிருள்—ஈயம், செம்பு. ௨. கன்னி-பெண், அழிவின்மை, கட்டிளமை.
தென்—இசை, அழகு, தென்னமரம், தெற்கு, கற்பு. ௫.

குன்று—மலை, குறைதல், சதயநட்சத்திரம். ௩.
அன்றில்—ஓர்பறவை, மூலநட்சத்திரம். ௨.
மன்றம்—வெளி, வாசனை, சபை. ௩.
மன்றல்—வாசனை, விவாகம். ௨.

தனம்—முலை, பொன், பசுவின்கன்று, குணம், அழகு, பசுமுதலிய முப்பொருள். ௬.
கனவு—நித்திரை, மயக்கம். ௨. கலிங்கம்—வானம்பாடி, சீலை. ௨.
கனை—நெருக்கம், ஓசை. ௨. கவரி—சாமரம், எருமை. ௨.
பனுவல்—சொல், நூல். ௨. படப்பை—ஊர்ப்புறம், தோட்டம். ௨.

அனந்தன்—சிவன், திருமால், சேடன், பலபத்திரன், அருகன். ௫.
அனந்தம்—அளவின்மை, பொன், ஆகாயம். ௩.
அனங்கம்—இருவாட்சி, மல்லிகை. ௨.
தனஞ்சயன்—அருச்சுனன், நெருப்பு, தசவாயுக்களுளொன்று. ௩.

சானகி—சீதை, மூங்கில். ௨. தனு—உடம்பு, வில், அற்பம். ௩.
சானு—மலை, முழந்தாள், மலைச்சாரல். ௩.
சோனை—திருவோணநட்சத்திரம், விடாமழை. ௨.
கானல்—மலைச்சாரலிற்சோலை, கடற்கரையிற்சோலை, பேய்த்தேர்.

வான்—ஆகாயம், மேகம், மழை, பெருமை. ௪.
தானை—சேனை, வஸ்திரம், ஆயுதப்பொது. ௩.
கானம்—தேர், இராகம், அறிவிலி, காடு, வானம்பாடி. ௫.
ஏனல்—செந்தினை, தினைப்புனம். ௨.

முனி—*யானைக்கன்று, முனிவன், வில், அகத்தி. ௪.
துனி—புலவிநீட்டம், துன்பம், வியாதி, நதி, கோபம். ௫.
பனி—நடுக்கம், துன்பம், அச்சம், குளிர்ச்சி, பனி. ௫.
சினை—முட்டை, கருப்பம், மரக்கொம்பு. ௩.

மான்—மான், விலங்கின்பொது, மகரராசி. ௩.
கான்—வாசனை, காடு. ௨. கல்வி—ஊர்க்குருவி, ஆமை. ௨.
ஏனாதி—நாவிதன், மந்திரி, படைத்தலைவன். ௩.
மீன்—சித்திரைநட்சத்திரம், நட்சத்திரம், மீன். ௩.

* கயமுனி - யானைக்கன்று.

ஞானமேயறிவுகல்விநல்லதத்துவநூன்மூப்பேர்
யானமேமரக்கலத்தோடெழிலூர்திவிகற்பிரண்டாம்
ஏனமோலைக்குடைப்பேரெறுழியுமறமுமப்பேர்
மேனியேவடிவமென்பநிறத்தையும்விளம்பலாமே. (கரு)

ஞானமென்பது—அறிவு, வித்தை, ஞானநூல். ௩.
யானம்—மரக்கலம், வாகனவிகற்பம். ௨.
ஏனம்—ஓலைக்குடை, பன்றி, பாவம். ௩. மேனி—உருவம், நிறம். ௨.

அன்னையேமுன்பிறந்தாடோழிதாயாகுமென்ப
அன்னமோதிமமேசோறுமாகாரமுடனெய்யுண்டி
தன்மையேயியல்பினோடுதன்மையினிடமுஞ்சாற்றும்
பன்னலேநெருக்கம்வார்த்தைபருத்தியின்பேருமாமே. (கசு)

அன்னை—முன்பிறந்தாள், தோழி, தாய். ௩. அன்னம்—அன்னப்புள், சோறு. ௨. ஆகாரம்—உடம்பு, நெய், உணவு. ௩.
தன்மை—அழகு, குணம், தன்மையிடம். ௩.
பன்னல்—நெருக்கம், சொல், பருத்தி. ௩.

வனமேநீர்மிகுதிகாடுவளர்சோலைதுளசியீமம்
மனுவேமந்திரமோர்நூலாமண்ணையேபேயிளமைமூடன்
புனையென்பதழகினோடுபொலிவுமொப்பனையுமாகும்
மனையென்பமனைவிவீடாம்வதுவையேமணங்கல்யாணம். (கஎ)

வனம்—நீர், மிகுதி, காடு, சோலை, துளசி, சுடுகாடு. ௬.
மனு—மந்திரம், ஓர்தருமநூல். ௨. மண்ணை—பேய், இளமை, அறிவிலான். ௩. புனை—அழகு, பொலிவு, அலங்காரம். ௩.
மனை—இல்லாள், வீடு. ௨. வதுவை—வாசனை, விவாகம். ௨.

அன்வினையொடுபெயர்க்கும்விகுதிசாரியையுமாகும்
மன்னிடுங்கனைத்தலென்பதிருளோசையிருபேர்வைக்கும்
இன்னனவொருசொற்பல்பேர்க்கியற்கவிமுந்நூற்றொன்பான்
சொன்னவன்குணபத்திரன்றாள்சூடுமண்டலவன்றானே. (கஅ)

அன்—வினைவிகுதி, பெயர்விகுதி, சாரியை. ௩.
கனைத்தல்—இருள், ஒலி. ௨.

னகரவெதுகை முற்றிற்று.

ஆக விருத்தம்-௩௱௯.

* ஒருசொற்பல்பொருட்பெயர்த்தொகுதி முற்றுப்பெற்றது.

கணபதி துணை.

# பன்னிரண்டாவது

## பல்பெயர்க்கூட்டத்தொருபெயர்த்தொகுதி.

### காப்பு.

சொல்வகையெழுத்தெண்ணெல்லாந்தொல்லைநாளெல்லையாக
நல்வகையாக்கும்பிண்டிநான்முகனுளுந்தீமை
வெல்வினைதொடங்கச்செய்துவீடருள்வோன்றாள்போற்றிப்
பல்வகைப்பெயர்க்கூட்டத்திதொருபெயர்பகரலுற்றாம்.

க. மோட்சம்.

கூறியகூறிறாலுங்குற்றமொன்றிலையருத்தம்
வேறுளதாயினென்றுவிதித்தலின்விரித்துமுன்னம்
ஊறிலாச்சிறப்புவர்க்கமுரைத்திவட்பொதுவர்க்கத்தில்
ஏறியவூழுஞ்சொல்வாமேகமேவீடுபேறு. (க)

உ: பிறப்பு, வினை, தோற்றம், சுடர்.

இருமையேயிம்மையோடுமறுமைநல்வினையினோடு
மருவுதீவினைகளென்பமற்றிருவினையினும்
இருவகைத்தோற்றமென்றேயிடுஞ்சராசரங்களென்ப
இருசுடர்மதியமற்றையிரவியென்றியம்பலாமே. (உ)

உ: மரபு, கந்தம், அறம், பொருள்.

இருமரபன்னைதந்தையெய்தியவழியாங்கந்தம்
இருவகைநற்கந்தங்களேற்றதுர்க்கந்தமென்ப
இருவகையறங்களென்பவில்லறந்துறவறங்கள்
இருவகைப்பொருள்கள்கல்வியேற்றசெல்வங்களாமே. (ங)

உ: கூத்து. க! பழம், பாவபுண்ணியவழக்கம்.

இருவகைக்கூத்துத்தானேயியன்றதேசிகமேமார்க்கம்
கருதிமுப்பழங்களின்பேர்கதலிமாப்பலாவென்றாமே
விரைவொடுசெய்தலேசெய்வித்தலேயுடம்பாடென்ன
வருமுறைபாவமோடுபுண்ணியவழக்கமாமே. (ச)

௩: பிறப்பு, பொறி, காலம், தொழில்.

மும்மையேயும்மையிம்மைமொழிக்நிமெறுமையென்ப
செம்மையாம்வாக்குக்காயந்திகழ்மனமுப்பொறிப்பேர்
மும்மையாங்காலப்பேரின்மொழியிறப்பெதிர்நிகழ்ச்சி
மும்மையாஞ்செய்கைபண்ணன்முறைகாத்தல்சிதைத்தலாமே. (௫)

௩: இடம், நிலம், குற்றம், சுடர்.

மூன்றிடமென்பதன்மைமுன்னிலைபடர்க்கையாகும்
ஆன்றமுந்நிலங்கள்பூமியந்தரஞ்சுவர்க்கமென்ப
மூன்றுகுற்றங்கள்காமமுநிர்சினமயக்கந்தானே
மூன்றுசெஞ்சுடரேதிங்கண்முளைத்தெழுபரிதியங்கி. (௬)

௩: மொழி, வேதத்தீ, உயிர்த்தீ.

பழித்திடல்புகழ்தன்மெய்ம்மைபயக்குமும்மொழிப்பேராகும்
கழிப்பில்வேதத்தின்முத்தீகாருகபத்தியத்தோ
டழிப்பிலாத்தெற்கிலங்கியாகவனீயமென்ப
ஒழிப்பிலாவுயிரிலங்கியுதரம்விந்துறுசினத்தீ. (௭)

௩: குணம். (சாத்துவிகச்செயல்.)

ஏற்றசாத்துவிகத்தோடேயிராசதந்தாமதங்கள்
ஆற்றமுக்குணங்களாகுமதிற்சாத்துவிகமேஞானம்
சாற்றியதவமேமெய்ம்மைசால்புநல்லருளுண்டாதல்
போற்றியவாமைபோலைம்புலனடங்குதுதயாமே. (அ)

(இராசதச்செயல்.)

தானமேதயமேமெய்ம்மைதருமம்பேணுதவிரேடு
ஞானமேகல்விகேள்விநலனிவைதெரிதருமே
ஈனமொன்றில்லார்வைத்தவிராசதகுணங்களென்ப
ஊனமிலுறுவன்முன்னுரைத்திடுமுறைமைதானே. (௯)

(தாமதச்செயல்.)

தாமதநிறைபேருண்டிசாம்புதல்சோம்புமூரி
காமமேந்திகேடுகண்ணுறக்கம்பொச்சாப்பு
ஏமமாஞ்சலமேவஞ்சகாட்டியவிம்மூப்பாலும்
மாமலிவுடனேமற்றமெலிவொடுசேமனுமாமே. (௧௦)

௩: தானம் (உத்தமதானம்.)

[illegible]றவறுதானமூன்றுவகைதமிலுத்தமந்தான்
பெறுமுறையோம்பிவைத்துப்பேணியபொருளைத்தானே
குறுகியேபெறுகவென்றுகுறையிரந்தடங்கிநோற்கும்
உறுதவர்க்குவந்துதாழ்ந்தேயுபகாரஞ்செய்தலாமே. (௧௧)

(மத்திமதானம், அதமதானம்.)
சிருறுப்பில்லார்மற்றைச்சிதடராதலர்க்குநல்கல்
வாருறுகொங்கைநல்லாய்மத்திமதானமென்ப
ஆர்வமேபுகழ்கண்ணோட்டமச்சங்கைம்மாறுமற்றைக்
காரணமின்னவெல்லாங்கடைப்படுதானமாமே.  (கஉ)

ங: கழுகு, பலி, புரம், சூரியவீதி.
திரிகடுகஞ்சுக்கோடுதிப்பலிமிளகுசெப்பும்
திரிபூலையென்பதானேதிகழ்கடுநெல்லிதான்றி
புரமூன்றுசெம்பொன்வெண்பொன்போற்றியகரும்பொன்னென்ப
விரவியமேடமேறுமிதுனமேயருக்கன்வீதி.  (கங)

ச: நிலம், கதி, அங்கம்.
முல்லையேகுறிஞ்சிநெய்தன்மொழிந்திடுமருதமென்ப
நல்லநானிலமென்றோதும்நாற்கதியும்பர்மக்கள்
சொல்லியவிலங்கினோடுநரகர்சாதுரங்கமென்ப
வெல்லுமால்யானைதேரேவெம்பரிகாலாளாமே.  (கச)

ச: இழிச்சொல், வேதம்.
குறளைபொய்கடுஞ்சொல்லோடுகூறியபயனில்வார்த்தை
நறுந்தல்கேட்டிமற்றைநால்வகையிழிச்சொலாகும்
மறுவிலாவிருக்கினோடுவளமிகும்யசுவேசாமம்
அறைதருமதர்வமென்பவாமிவைவேதநான்கே.  (கரு)

ச: புருஷார்த்தம், கேள்வி, அரண், ஆடவர்குணம்.
அறமொடுபொருளின்பம்வீடானநாற்பொருள்களாகும்
உறுமிவைதம்மைக்கேட்டலொத்தநால்வகைக்கேள்விப்பேர்
செறிகடம்வெற்புநீரேதிணிமதிலரணநான்காம்
அறிவொடுநிறையேயோர்ப்புக்கடைப்பிடிகுணநான்காமே.  (கசு)

ச: பெண்கள்குணம், புண்ணியத்தோற்றம்.
நாணமேமடமேயச்சநாட்டியபயிர்ப்புநான்கும்
மாணிழைமடநல்லார்க்குவைத்தநற்குணங்களாகும்
பேணியதவமொழுக்கம்பெருங்கொடைகல்விநான்கிற்
பூணுநற்பொருள்களுன்கும்புண்ணியத்தோற்றமாமே.  (கஎ)

ச: பொன்வகை, பூவகை.
சொல்லியசாதரூபங்கிளிச்சிறைதுலங்குகின்ற
நல்லவாடகமேசாம்பூநதமிவைநால்வகைப்பொன்
மெல்லியகொடிப்பூக்கோட்டில்விளங்குபூநீர்ப்பூவேறு
புல்லியபுதற்பூவென்னப்பொருந்துநால்வகையிற்பூவாம்.  (கஅ)

ச: உண்டி, ஊறுபாடு, அரசருபாயம்.

கறைபடவுண்பதின்பகக்குவபருக்களுண்காம்
எதிதவேருத்தல்வெட்டலெய்தலுன்கூறுபாடாம்
முறைபவேசாமம்பேதமுக்கியதானக்தண்டம்
நெறிபமேுபாயகான்குக்கிருபர்தம்முறைமையாமே. (கக)

ச: உயிர்த்தோற்றம், புலவர்.

துவமதாங்குடற்போர்வைக்குட்டொடர்புறுமுட்டைதன்னில்
கவையறுகிலத்தின்வேர்வினல்லுயிர்த்தோற்றகான்காம்
கவியொடுகமகன்வாதிகாசிலாவாக்கியென்ப
புவியின்மேனல்வகைத்தாம்புலமையரியல்புதானே. (உ0)

(கவி, கமகன் என்னும் புலவர்தன்மை.)

தீட்டியவாசிரேணுமதுரஞ்சித்திரம்வித்தாரம்
பாட்டினில்யாருமெச்சப்பாடுவோன்கவியென்றுரும்
காட்டியவரும்பொருட்கள்செம்பொருணடையவாகக்
காட்டியேவிவகரிப்போன்கமகனென்றறையலாமே. (உக)

(வாதி, வாக்கி என்னும் புலவர்தன்மை.)

ஏதுவுமேற்கோளுந்தானெடுத்துடன்காட்டியாங்கே
வாதினிற்பிறன்கோளெல்லாமறுப்பவன்வாதியென்ப
ஓதியவறம்பொருட்களுற்றிடுமின்பம்வீடு
கோதின்றிக்கேட்கவேட்கக்கூறுவோன்வாக்கியாமே. (உஉ)

(ஆசுகவி.)

கொடுத்திடும்பொருளின்மற்றுக்கூறியவினத்திற்கோட்டி
அடுத்திடுமெப்போதப்போதசைவின்றியாருமெச்ச
எடுத்தியல்பாகப்பாடுமெவனவனாசுசொல்வான்
வடுப்பினவனேயவொண்கண்மடமொழிவல்லிகல்லாய். (உங)

(மதுரகவி.)

பொருளினிற்பொலிவுமற்றும்பொருந்தியசொல்லின்செல்வம்
தருதொடைதொடைவிகற்பத்தாக்துறைதந்தமிர்தமூற
உருவகமுதலாவைத்தவோதியவலங்காரத்தோ
டிருளறவோசைதோன்றியிருந்ததுமதுரமாமே. (உச)

(சித்திரகவி.)

சொற்றிடுமாலைமாற்றேகழிருளமேகபாதம்
குற்றமில்சக்கரத்தின்கூறெழுகூற்றிருக்கை
கற்றிடுமடிமயக்குக்காட்டும்பாவின்புணர்ப்போ
டொற்றெழுத்தியாவுந்தீர்ந்தவொருபொருட்பாட்டிரேுதிம். (உரு)

(இதுவுமது.)

சித்திரப்பாவேமற்றவிசித்திரப்பாவினுவொ
டுத்தரங்குற்றமில்லாவோரெழுத்தினத்திற்பாட்டே
வைத்திடுங்காதைதன்னைமறைப்பதுகரந்துறைப்பாத்
தைத்தகோமூத்திரிகூடசதுர்த்தமென்றிசைத்தபாட்டு. (உசு)

(இதுவுமது.)

சருப்பதோபத்திரங்கள்சார்ந்திடுமெழுத்திரோடு
வருக்கமும்வடநால்வைத்தவருமுதாரணமுநோக்கி
விரித்திட்விசைத்துவைத்தமிறைக்கவிப்பாட்டுமற்றும்
தெரித்ததுபாடவல்லோன்சித்திரகவியென்றுமே. (உஎ)

(வித்தாரகவி.)

தெரித்தமும்மணியின்கோவைசெப்புபன்மணியின்மாலை
வருத்தந்தீர்மடலையூர்தன்மறத்தொடுகலிவெண்பாவே
உருத்தபாசண்டமற்றுமுறுமியலிசையேகூத்தும்
விரித்துறப்பாடவல்லோன்வித்தாரகவியென்றுமே. (உஅ)

ச: சரம்விடுநிலை. (வைசாகம்.)

வரிசிலையியற்றுவோர்க்குவகுத்தநால்வகையேநிற்றல்
பரவுவைசாகமற்றும்பகர்ந்தவாலீடத்தோடு
பெருகியமண்டலந்தான்பிரத்தியாலீடமாகும்
ஒருகானின்றொருகாறன்னைமுடக்கல்வைசாகமென்ப. (உகூ)

(ஆலீடம், மண்டலம், பிரத்தியாலீடம்.)

வலப்பதமண்டலித்துவாமபாதந்தான்முந்து
நிலைப்பெயரேயாலீடம்நின்றமண்டலத்தினும்
இலக்கணத்தோடேகூடவிருகாலுமண்டலித்தல்
வலப்பதமுந்திப்பிற்கான்மண்டலம்பிரத்தியாலீடம். (ஙo)

ரு: எழுத்துப்பொருத்தம்.

பாலனேகுமரன்மன்னன்பமுதிர்கிழவன்சாவு
கோலுந்தன்பேரெழுத்துக்குறித்ததுமுதலாக்கொள்க
ஏனுமுன்னெழுத்துமூன்றுமின்பம்பின்னிரண்டுந்தீதாம்
சாலுமூவகைச்சீர்தானேசாற்றியகவிதைக்கின்பம். (ஙக)

ரு: மூற்பக்கப்பட்சி.

அகரமேயாதியாகவைந்துகுற்றெழுத்துந்தானே
புகல்வல்லீறுந்தைகாக்கைபோர்க்கோழியொடுகலாபி
தொகுமுண்டிபோக்குவேந்துதுக்கீக்குஞ்சாவாகும்
பகருமைந்தெழுந்துள்யாதுபற்றினுமதுவேமூன்றும். (ஙஉ)

ரு: பிற்பக்கப்பட்சி.

பிற்பக்கமாகில்வேறுபேதிக்கும்யாதோவென்னில்
அற்புதவுண்டிசாவேயறிதுயிலரசபோக்குப்
பொற்பறுமரணந்துக்கமில்லாதபொழுதையோர்ந்து
பற்பலசெய்யுட்டானேபகர்ந்திடின்மிகுந்தன்மை. (கங)

ரு: உயிரிழப்பு.

சுவையின்மீனளிநாற்றத்திற்றும்பியேப்பிசந்தன்னில்
நவையிலாவசுணந்தானோடல்விசைதணிற்பதங்கம்
உவகையாமொளியைவேட்டேயுயிரினையிழக்குமைந்தாம்
இவ்வையெலாமுடையோர்தம்பாலாருயிரிழந்திடாதார். (கச)

ரு: திணை, வாசம்.

கோவியலைந்திணைப்பேர்குறிஞ்சியேசெறிந்தமுல்லை
பாலையேநெய்தலோடுபேரவியமருதமாமே
ஏலந்தக்கோலமற்றையிலவங்கந்தொடுசாதிக்காய்
சாலுங்கர்ப்பூரமைந்துஞ்சாற்றியபஞ்சவாசம். (கரு)

ரு: விரை, அகிற்கூட்டு.

சந்தனமகிலேனோடுதகரங்குங்குமமேகோட்டம்
இந்தவைந்தென்றுசொல்லுமெய்தியவிரைகளின்பேர்
உந்துசந்தனங்கர்ப்பூரமுடனேரிகாசுசெந்தேன்
அந்தவேலங் * கனென்பவகிற்கூட்டோரைந்தாமே. (கசு)

ரு: அரசன்குழு, அரசன்சுற்றம்.

தடுக்குமந்திரிபுரோகிதன்றெறூழிற்றூதனொற்றன்
எடுத்துவந்திருந்தசேனைக்கிறைவனைங்குழுவென்றாகும்
படைத்தொழிலோர்நிமித்தம்பார்ப்பவராயுள்வேதர்
அடுத்தகட்பாளர்பார்ப்பாரைவகையுறுதிச்சுற்றம். (கஎ)

ரு: குரவர், பால்.

அரசனேயுபர்த்தியாயனன்னையேயையன்மூத்தோன்
குரவரோரைவரென்றுகூறினர்வேறுநூலோர்
ஒருவனேயொருத்திமற்றுமுரைத்திடும்பலரேயொன்று
விரவியபலவென்றைந்துமேவியவைம்பாலாமே. (கஅ)

ரு: அங்கம், பாதகம்.

பஞ்சாங்கந்திதியேவாரம்பகர்ந்தாள்யோகத்தோடு
தஞ்சாதகரணமென்பரும்பொய்க்கொலைகளவுபொய்யே
அஞ்சாதகள்ளருந்தலார்குருநிந்தைதயென்ப
பஞ்சார்மெல்லடிநல்லாய்கேள்பஞ்சபாதகத்தின்பேரே. (ககூ)

* வெல்லம் என்றும் பாடம். அகிற்கூட்டைந்தனுள் வெல்லமும் ஒன்றாகக் கூறுவர் சில ஆசிரியர்.

ரு: சயனம், கூந்தலினைம்பால்.

மயிற்றூவியிலவின்பஞ்சுமற்றைச்செம்பஞ்சுவெண்பஞ்
சயிர்ப்பிலாவன்னத்தூவியாம்பஞ்சசயனத்தின்பேர்
வியக்குமைம்பால்வகைப்பேர்மேவியமுடியேகொண்டை
குயிற்றியகுழல்பனிச்சைகோலவார்சுருளுங்கூறும். (சுO)

ரு: தூக்கதி, உணவு.

மல்லமேமயூரமற்றைவான்ரம்வல்லியம்மே
சொல்லியசரமேயென்பதூரகதகதிகளைந்தாம்
பல்லினாற்கடித்தனக்கல்பருகலேவிழுங்கன்மற்றும்
மெல்லலேசுவைத்தலாகும்வினைவிலைந்துணவுதாமே. (சுக)

ரு: வினா, பூதம்.

அறியாதான்வினாவல்லின்னையறிவொப்புக்காண்டலோடு
குறியுடனையந்தீர்தல்குறித்தவனறிவுகோடல்
கறைய்றமெய்யவற்குக்காட்டலைவகைவினாவாம்
பெறுநிலநீர்தீகாற்றேபெருவிசும்பைந்துபூதம். (சுஉ)

ரு: ஈசுரன்முகம், இசைக்கருவி.

தலைவனைம்முகங்களாவசத்தியோசாதம்வாமம்
புலனுறுமகோரமேதற்புருடமீசானமென்ப
குலவுதோறுளைநரம்புகூறிடுகஞ்சங்கண்டம்
இலகுமிவைவைந்தாலாகுமிசைக்கருவிகளைந்தாமே. (சுங)

ரு: வேள்வி, தாயர்.

தெய்வமேபிரமம்பூதந்தென்புலத்தோர்மனித்தர்
ஐவகையோரையோம்பலைவகைவேள்வியாமே
உய்வகைபாராட்டுந்தாயூட்டுந்தாய்முலைத்தாய்கைத்தாய்
செய்வகையறிந்துபோற்றுஞ்செவிலித்தாயைவர்தாயர். (சுச)

ரு: கைத்தொழில், மெய்யவத்தை.

இலகியவெண்ணலூசியெழுதலேயிலையைக்கிள்ளல்
மலர்தொடுத்திடுதலேயாழ்வாசித்தலெனுழிலைந்தாகும்
குலவுகொட்டாவிகெட்டைகுறுகுறுப்பேமூச்சீடே
அலமரவொடுங்கிநட்டுவிழுதன்மெய்யவத்தையைந்தே. (சுரு)

ரு: காடுபடுதிரவியம், கடல்படுதிரவியம்.

அரக்குடனிறடிதேனேயாய்மயிற்பீலிகாவி
நெருக்கியகாட்டினுற்றகெடுந்திரவியங்களைந்தாம்
இரைக்கடற்படுவவுப்புச்செய்யவொண்பவளம்வெண்முத்
திரைத்தெழுசங்கொக்கோலை * யிவ்வைந்துமென்னலாமே. (சுசு)

* ஓர்க்கோலை என்பாருமுளர்.

### ௫: காடுபடுதிரவியம், நகர்படுதிரவியம்.

செக்கெல்செவ்விளநீர்மற்றைச்சிறுபயறுடனேவாழை
கன்னலிவ்வைந்துகாட்டிற்கருதியதிரவியப்பேர்
மின்னுகண்ணாடிபித்தன்வெந்திறன்மந்தியானை
மன்னவனகரியைந்துவருந்திரவியங்களென்ப. (௪௭)

### ௫: மலைபடுதிரவியம், புலனுகர்ச்சி.

கறியொடுகோட்டமிக்காரகிலொடுதக்கோலம்
கரியகுங்குமமைந்தென்பகன்மலைத்திரவியப்பேர்
துறையிலம்பொறிநுகர்ச்சிசுவையொளியூறேயோசை
அறையுநாற்றங்களென்னுமடைவிவையாகுமன்றே. (௪௮)

### ௫: மன்மதபாணம், அவற்றின்பெயர்.

அசைவிலாவனசஞ்சூதமசோகமேமுல்லைநீலம்
ஒசியும்வேள்கணைகளாகுமுன்மத்தமதனமோகம்
வசையில்சந்தாபத்தோடுவசீகரணங்கணைப்பேர்
இசையுமற்றிவைகள்செய்தேயிடுமவத்தையுமேற்சொல்வாம். (௪௯)

### ௫: ஐங்கணையவத்தை.

(சுப்பிரயோகத்தின்றன்மை, விப்பிரயோகத்தின்றன்மை.)

பெருகுசுப்பிரயோகம்பின்பிறந்தவிப்பிரயோகம்மேல்
மருவியசோகமோகமரணமுமுறையேசெய்யும்
பெருகுசுப்பிரயோகந்தான்பேச்சொடுநினைவுமாகும்
விரவுவிப்பிரயோகந்தான்வெய்துயிர்த்திரங்கலாமே. (௫0)

(சோகத்தின்றன்மை, மோகத்தின்றன்மை,
மரணத்தின்றன்மை.)

சோகமேவெதுப்பினோடுதுய்ப்பனவைதெவிட்டல்செய்யும்
மோகமேயழுதலோடுமொழிபலபிதற்றலென்ப
வேகமாமரணந்தானேமிகுமயக்கோடயர்ப்பாம்
பாகடர்சொல்லினல்லாய்பகருநூலியல்பிதாமே. (௫௧)

### ௯: அந்தணர்தொழில், அரசர்தொழில்.

ஓதலேயோதுவித்தலுடன்வேட்டல்வேட்பித்திட்டல்
ஈதலேயேற்றலாறுமேற்குமந்தணர்தொழிற்பேர்
ஓதலேவேட்டலீதலுலகோம்பல்படைபயிற்றல்
மேதகுபோர்செய்திட்டல்வேந்தர்செய்தொழில்களாறே. (௫௨)

சூ: அரசர்க்கங்கம், வைசியர்தொழில்.

படைகுடிகூழமைச்சுப்பற்றியநட்பிரேனாடு
நெடுமதிலரசியற்குசிகழ்த்தியவாறுபேதம்
மிடையறவோதல்வேட்டல்வேளாண்மைவாணிகத்தி
னுடனிரைகாத்தலேரையுழலாறும்வசியர்க்காமே. (ருங)

சூ: சூத்திரர்தொழில்.

வசியர்தந்தொழில்களாறுள்வருத்தமுத்தொழில்களான
பசுவோம்பல்பொருளையீட்டல்பயிரிடல்புராணமாதி
நசையுறவோதலீதனண்ணுமந்தணர்முன்னோர்க்கு
வசைதவிராகூலம்மாம்வகைத்தொழில்சூத்திரர்க்காம். (ருச)

சூ: திகிரிமன்னர்.

அரிச்சந்திரனளனேவெற்றியாமுசுகுந்தனோடு
பொருப்புறப்புகழைவைத்தபுருகுச்சன்புரூரவாவே
விரித்தபூந்தாமக்கார்த்தவீரியனென்றின்னோரே
தெரித்துமுன்னோடுத்துவைத்ததிகிரிமன்னவர்களாறே. (ருரு)

சூ: வேதாங்கம், உட்பகை.

ஆறங்கஞ்சிகைஷகற்பமாம்வியாகரணமற்றும்
வீறியநிருத்தஞ்சந்தோவிசிதஞ்சோதிடமென்றாகும்
கூறிடுங்கொடியகாமங்குரோதமேயுலோபமோகம்
பாறியமதங்களேமாற்சரியமுட்பகையாறென்ப. (ருசா)

சூ: தானை, படை, சுவை.

ஒத்தவில்வேல்வாள்யானையுயர்பரிதேரோடாறே
சத்தமூலங்கான்கூலிதுணைபகைநாடென்றாறே
தித்தித்தல்புளித்தல்கூர்த்தல்சேரவேதுவர்த்தல்காழ்த்தல்
கைத்தலேயறுசுவைக்குக்காட்டியவபிதானங்கள். (ருஎ)

சூ: உட்சமயம்.

அரியவுட்சமயமாறேயாவனசைவர்தூய்மை
பெருகுபாசுபதத்தோடுபிறங்குமாவிரதமற்றும்
கருதியவீடுபேறுகாட்டுகாளாமுகந்தான்
மருவியவாமமிக்கவைரவமென்னலாமே. (ருஅ)

சூ: புறச்சமயம்.

அறுபுறச்சமயந்தானேயறையுலோகாயதம்பின்
உறைதருபௌத்தமேயாருகதமீமாஞ்சையோடு
குறிபெறுமாயாவாதங்கூறியபாஞ்சராத்ரம்
நெறிபெறுமிவையேயென்னநிகழ்த்துவர்நூல்வல்லோரே. (ருகு)

கூ: காட்டமைதி, அரசியல்.

செல்வமேவினவுமிக்கசெழுவளஞ்செங்கோலுண்மை
ஒல்குறோய்குறும்பில்லாமையுற்றகாட்டமைதியாகும்
நல்லறமறத்தான்மேலேகாட்டியவறம்பொருட்கள்
ஒல்லுமின்பந்தானென்பவுலகியலாறபேதம். (௬0)

(அறநிலையறம், மறநிலையறம்.)

தந்தமின்வருணக்காப்பிற்றரும்பொருளாலேபேணல்
அந்தவாறியற்கைதம்முளறநிலையறமென்றாகும்
முந்திகலறுத்தல்செஞ்சோற்றுதவியில்லோர்ச்செகுத்தல்
வந்தவானிரையமீட்டன்மறநிலையறமென்றாமே. (௬௧)

(அறநிலைப்பொருள், மறநிலைப்பொருள்.)

நெறிவழின்றூத்தநிலையினுழுழக்துழந்து
பெறுபொருளறநிலைக்குப்பேசியமுறைமையாகும்
செறுநர்தம்பொருளுமற்றத்தெண்டத்திற்பொருளுஞ்சூதின்
மறுகியபொருளுமம்மமறநிலைப்பொருளின்பேரே. (௬௨)

(அறநிலையின்பம், மறநிலையின்பம்.)

கூறமோர்பருவநல்லகுலமொத்ததாகத்தீவேட்
டாதியவில்லிருத்தலறநிலையின்பமாகும்
ஏறுதான்றழுவல்வில்லாவிலக்கமெய்திடுதலெல்லாம்
மாறுடைநெறியிற்கூட்டமறநிலையின்பமாமே. (௬௩)

கூ: கருமபூமிக்குரிமை.

வரைவொடுதொழிலேவித்தைதவாணிகமுழவேசிற்பம்
உரைசெயும்போகபூமியொழிவினிலாதிகாலம்
விரைசெறிபிண்டிவேந்தன்விதித்தலினஃதேயம்ம
கருமபூமியென்னும்பேர்கண்டதொன்றண்டுநூலின். (௬௪)

(போகபூமியியல்பு.)

விதியுளிபதினொன்றுமேவியபன்னீராண்டு
பதியொடுமேனிபோலப்பத்துப்பூந்தருவும்வேண்டும்
புதியபோகங்கொடுப்பப்புணர்ந்துதாம்பிரியாராகி
மதியொடுமெறுவுமென்னவாழ்வதுபோகபூமி. (௬௫)

கூ: போகபூமி.

வருமாதியரிவஞ்சம்பார்மதித்தகல்லரிவஞ்சம்பைம்
பொருளாரேமதவஞ்சம்மேற்புகழ்பெறுமேமவஞ்சம்
இருதேவகுருவத்தோடேயுத்தரகுருவமென்ன
வருபோகபூமியாறுவகைப்பமெியல்பதாமே. (௬௬)

௭: மாதர்கள், தாது.

வருநலபிராமிமற்றைமகேஸ்வரியொடுகௌமாரி
மருடீர்வைணவிவராகிமாகேந்திரியொடுசாமுண்டி
இருமையேழ்திருக்கள்பேராமிரதமேயுதிரமென்பு
பரவுதோலிறைச்சிமூளைபற்றுசுக்கிலந்தாதேழே. (௬௭)

௭: செங்கோல்வழக்கம், பிறப்பு.

அறமொடுபொருளேயின்பமன்பொடுபுகழ்மதிப்பு
மறுமையென்றேழுஞ்செங்கோன்மன்னவர்வயினேயாகும்
அறிவுளதேவர்மக்களறிவின்மீன்விலங்குசெந்துப்
பறவைதாவரங்களென்பகருமேழ்பிறப்பின்பேரே. (௬௮)

௭: தீவு, சமுத்திரம்.

இவர்தருநாவலோடேயிறலியேகுசைகிரவுஞ்சம்
புலிபுனைகமுகுதெங்குபுட்கரந்தீவேழின்பேர்
உவர்கரும்பின்சாறேடேயொண்மதுநெய்சிறந்த
நவமதாந்தயிர்பாலப்புநாட்டியகடலேழின்பேர். (௬௯)

௭: மேலுலகம்.

நவமாம்பூலோகமற்றுநாட்டியபுவலோகந்தான்
சுவலோகமகலோகம்மேசொற்றிடுஞ்சனலோகம்மே
தவலோகமதனினோடுசத்தியலோகமின்ன
உவமானமில்லாமேலேழுலகெனுமறிவினாலே. (௭0)

௭: கீழுலகம்.

அதலமேவிதலமற்றுமடைவானசுதலத்தோடும்
இதமுறுதலாதலம்மேரசாதலமகாதலந்தான்
புதியபாதலத்தினோடுபோற்றுங்கீழேழுலோகம்
உதவியவுலகநூல்சேரேழெனுமுலகுதாமே. (௭௧)

௭: நிரயவட்டம்.

பெருகியகுளிரின்வட்டம்பெருமணல்வட்டம்பொங்கும்
எருவையின்வட்டமற்றுமெறிந்தசாகரத்தின்வட்டம்
பொருவறவிருண்மேழ்கப்போர்த்திடும்புகையின்வட்டம்
இருள்வட்டம்பெருந்தீவட்டமென்பவேழ்நிரயவட்டம். (௭௨)

௭: நீரகம், நதி.

குழைவுறுகூடசாலமிரௌரவங்கும்பிபாகம்
விழுபூதியள்ளல்செந்துவிதித்தமாபூதியாமே
வழிகங்கையமுனையேநன்மதைசரஸ்வதிகாவேரி
விழுமியகுமரிகோதாவரியெழுநதியின்பேரே. (௭௩)

எ: முனிவர், காட்டுக்குற்றம்.

புலிபுகழ்கும்பயோனிபுலத்தியனங்கிராவே
கவுதமன்வசிட்டன்மற்றைக்காசிபனுமோர்க்கண்டன்
இவரெழுமுனிவர்விட்டிணுட்டியரேனங்கள்வர்
அவமலைழகால்வாய்மின்னையாமிவைகாட்டேழ்குற்றம். (௭௪)

எ: முகில்.

பொழியுமாவத்தமெங்கும்போர்த்தபுட்கலஞ்சங்காரம்
கழியுமாசவனமேகீர்க்காரியேருதிசொற்காரி
மொழிசிலாவருடமென்பமுகில்களோரேழினும்
அழிவுகாலத்திற்றோன்றியடர்வனபடர்பவானே. (௭௫)

அ: திசையானை.

களிற்றயிராவதஞ்சீர்காட்புண்டரீகந்தானங்
குளித்தவாமனம்பொன்றொடைக்குமுதமஞ்சனம்வெம்போரை
விளைத்திடும்புட்பதந்தமேவியசார்வபௌமம்
பிளிற்றுசுப்பிரதீகந்தான்பெருத்தவெண்டிசையானைப்பேர். (௭௬)

அ: மலை.

மன்னியவிமயத்தோடுமந்தரங்கைலைவிந்தம்
கொன்வளர்நிடதமேமகூடமேநீலவெற்புத்
துன்னியகந்தமாதனத்தொடுரும்வெற்பெட்டாம்
இன்னவையுலகநூலினியற்கையேயென்றுகாண்மின். (௭௭)

அ: நாகம்.

மன்னுவாசுகியனந்தன்மருவியதக்கன்சங்கன்
பன்னியகுளிகனோடுபதுமன்மாபதுமன்மற்றைக்
கொன்னெயிற்றழல்விழிக்கார்க்கோடகனென்றவெட்டும்
முன்னியகடவுட்பாம்பின்மொழியபிதானமாமே. (௭௮)

அ: திக்குப்பாலகர், அவர்சார்திசை.

திண்டிறன்மகவானங்கிசெறியமனிருதியோடு
கொண்டிடும்வருணன்வாயுக்குபேரனீசானனென்ன
எண்டிசையுலோகபாலரிவர்பேர்கீட்டிசைதொட்டென்னும்
கண்டகீழ்பால்வடக்குக்கதிரொடுதிங்கட்காமே. (௭௯)

அ: திக்குப்பாலகர்குறி, மூர்த்தம்.

தொடிபுகைசியஞ்சேறிக்குவைத்துவன்னென்றுஞாளி
இடபமேகமுலைதயானையெருகாகந்திக்கங்கம்
படிநீர்நிவனியாகாயம்பரிதியேவிரவுதிங்கள்
அடல்புனையியமானன்மற்றட்டமூர்த்தங்களாமே. (௮௰)

அ: சித்தி.

மன்னியவணிமாமற்றைமகிமாவேகரிமாவோடு
பின்னுறுலகிமாபிராத்திபெறும்பிராகாமியங்கள்
முன்னுறுமீசத்துவம்பின்முற்றியவசித்துவந்தான்
உன்னியநூல்களோதுமோரிருநான்கேசித்தி. (௮௧)

அ: யோக அங்கம்.

இயமமேநியமமுத்தியேற்றவாசனத்தினோடு
நயனுறுபிராணாயாமகாட்டியபிரத்தியாகாரம்
சயமுறுதியானத்தோடுதாரணைசமாதியெட்டும்
வியனுறும்யோகமென்றுவிதித்தனர்மதித்தநூலோர். (௮௨)

அ: தரும அங்கம்.

அறமையப்படாமைமற்றையவாவின்மையுவர்ப்பொன்றின்மை
நெறிகெழுமயக்கமின்மைநின்றவப்பழியைநீக்கல்
உறுதியினிறுத்தல்பேரன்புடைமையேயறம்விளக்கல்
இறைவனதறத்துட்கூறுமெட்டுறுப்பிவைகளாமே. (௮௩)

அ: அருகன் குணம்.

கடையிலாஞானத்தோடுகாட்சிவீரியமேயின்பம்
மிடையுருநாமமின்மைவிதித்தகோத்திரங்களின்மை
அடைவிலாவாயுவின்மையந்தராயங்களின்மை
உடையவனிறைவனென்னவுரைக்குமாருகதநூலே. (௮௪)

அ: சிவன் குணம்.

இன்னவையிருக்கநூலினிசைக்குமெண்குணங்கண்மற்றும்
தன்வயந்தூயதேகந்தகுமியல்புணர்வுமேலாய்ப்
பன்னுமுற்றுணர்வினோடுபாசங்களியல்பினீங்கல்
முன்னுபேரருளேமற்றைமுடிவிலாவாற்றல்பின்னும். (௮௫)

(இதுவுமது.)

வரம்பிலாவின்பமென்றேவாய்த்திடுங்குணங்களெட்டும்
தரம்பெறுசைவநூலிற்சாற்றியதொகையாமென்ப
திருந்துமிக்குணங்கடானேசேர்ந்தவனியாவனென்னிற்
பொருந்தியவுலகமெல்லாம்புரந்திடுங்கடவுளாமே. (௮௬)

அ: இறைவன் குற்றம்.

மன்னியவறிவுகாட்சிமறைத்தல்வேதநீயத்தோடு
துன்னுமோகநீயமாயுத்தொடர்நாமகோத்திரங்கள்
முன்னுறுமந்தராயமொழிந்தவெண்குற்றமாகும்
இன்னவைநீத்தோன்யாவன்யாவர்க்குமிறைவனுமே. (௮௭)

அ: வைசியர் பண்பு.

பெறுவதுதெரிதலீட்டல்பேணிமற்றவைபகுத்தல்
இறுவதஞ்சாமையென்றமிடனறிந்தொழுகல்வந்தே
உறுபெருந்தனிமையாதலுடன்முனிவிலனேயாதல்
மறுவறுபொழுதிற்கூடல்வசியர்தங்குணங்களெட்டே. (அஅ)

அ: கணிதம், மங்கலம்.

குணகாரம்பரியச்சந்தான்குறித்தபாற்கரமேமூலம்
தணவாமானதமேகன்யஞ்சவிதியேதருதமெட்டும்
கணியார்தங்கணிதந்தீபங்கவரிகண்ணாடிதோட்டி
புணர்மீனேமுரசகும்பம்பொலிகொடிசபமோரெட்டே. (அகூ)

அ: மெய்ப்பரிசம், காட்டின்கேடு.

தட்டலேபற்றலோதேடவலேநீண்டல்குத்தல்
வெட்டலீலகட்டலூன்றன்மெய்ப்பரிசங்களெட்டாம்
விட்டில்தன்னரசகால்வாய்மிகுமழைமிகுகாற்றோடே
கட்டம்வேற்றரசினைகாடுறுங்கேடெட்டென்ப. (கூ0)

அ: மணம்.

பிரமமேபிரசாபத்தியம்பெருகுமாரிடமேதெய்வம்
கருதகாந்தருவத்தோடேகாட்டியவசுரமற்றும்
பரவியவிராக்கதங்கள்பைசாசமிருநான்கென்ப
மருவியவுலகியற்கைவருத்திடுமணங்களின்பேர். (கூக)

அ: மாலை.

நிரைகவர்ந்திடுதல்வெட்சிநிரைமீட்டல்கரந்தையென்ப
வெருவார்மேற்சேறல்வஞ்சிமீட்டெதிரூன்றல்காஞ்சி
வருநொச்சிபுரிசைகாத்தல்வளைத்திடலுழிஞையாகும்
பொருவதுதும்பையென்பபோர்வெல்லல்வாகையாமே. (கூ௨)

அ: இராசசகாயர்.

கரணத்திற்றிரள்கள்வாய்த்தகடைகாப்போர்கரிமாக்கள்
தருபடைத்தலைவர்மற்றுந்தன்கிளைச்சுற்றம்யானை
புரவியூர்வோரேயென்றும்போற்றுகாவிதியரென்றும்
விரவியவெண்பேராயம்வேந்தருக்கமைத்ததாமே. (கூ௩)

அ: உடற்குறை, செய்யுளசைக்கணம்.

குறளொடுசெவிடூமைக்கூன்மருள்குருடுமாலே
உறமுறுப்பில்லாப்பிண்டமோதியவெண்மெய்யெச்சம்
நிறையுசீர்நிலனேதேயுநிகழ்சுடர்மதியேவானம்
பெறுமியமானன்வாயுப்பேரியகணங்களெட்டே. (கூ௪)

(நற்கணம், துர்க்கணம்.)

நிலமொடுசேர்வெண்டிங்கணேரியமானன்வெய்யோன்
உலவுதீவாயுவிண்ணென்றேழியகணங்களெட்டில்
நலமுறுகவிதைமுன்னர்நாட்டியநான்குநன்றாம்
கலகமாம்பின்னர்நான்குகணங்களுங்காணுங்காலே. (கசு)

(செய்யுளசைக் கணப்பொருத்தம்.)

நிரையதுமுன்றதானேநிலக்கணநேர்முன்னாகி
நிரையிணைபின்னராயினீரேநேரிணைபின்னாகி
நிரையதுமுன்னராயினெடியவெண்டிங்களென்ப
புரையறநேர்மூன்றாகிற்பொருந்தியவியமானன்றான். (கசு)

(இதுவுமது.)

நிரைநடுவாகமற்றைநேரிருபாலும்வெய்யோன்
நிரையிருபாலுநிற்கநேர்நடுத்தீயென்றாகும்
நிரையிறுவாகமற்றுநேரிணைமுன்னேவாயு
நிரையிணைமுன்னராகிநேரிறினீளாகாயம். (கஎ)

கூ: நீத்தவர்க்குச்செய்புண்ணியம்.

எதிர்கொளல்பணிதலோடிருக்கைகால்கழுவலாறும்
புதுவிரைநறும்பூத்தூபம்புனைவிளக்கடைவேயேத்தல்
விதியின்வாளரவுதோறும்விடமுநீத்தென்னநீத்த
அதிகருக்கமுதமேந்தலவைநவபுண்ணியந்தான். (கஅ)

கூ: பூமிபாககண்டம்.

வடபாலேதென்பால்கீழ்பால்வருத்தமேல்பால்விதேகம்
வடயாலேதென்பான்மீதுவைதமிரேபதங்கள்
வடபாலேதென்பான்மீதுவைத்திபொரதத்தோடு
வடிவாமத்திமகண்டங்கள்வருநவகண்டமாமே. (கக)

கூ: தாரணை.

வைத்தநாமங்கண்மாலையவச்சிரஞ்சித்திரங்கள்
சத்தமேவத்துவோடுசதுரங்கஞ்செய்யுளெட்டும்
புத்தரேகாணப்பட்டபொருட்குறைநிறைவோரென்றும்
ஒத்ததாரணைகளென்பவோதுமொன்பானுமீதே. (௪00)

கூ: நாளறிதல்வகை.

தனுநாளிற்பின்னுஞ்சார்ந்திடோறுமாறும்
வினவியவெட்டொன்பானும்விருத்தமொன்றில்லைதன்னுள்
இணையமுன்றடனைந்தாநாளேழாகளிவைபொருந்த
இணையுமிம்மூன்றொன்பானுநேர்பமூன்றவட்டம். (௪0௧)

கூ: நடனதாளம்.

அடியினிற்சமதானத்தோடருமமேயரிதானம்மேற்
படிமமேதருவதானம்பற்றியசித்திரத்தான்
விடதானஞ்சயமேமற்றுமேவியவிர்த்ததானம்
கடையுறுபுலவரோதுநவதானமிவைகளாமே. (க௰உ)

கூ: இரத்தினம்.

மரகதம்பவளநீலம்வச்சிரம்பதுமராகம்
விரவியதரளமேகோமேதகம்புருடராகம்
உரவியகாந்திவிட்டேயுமிழ்வயிடூரியந்தான்
பெருமியநவமணிக்குப்பெயரிவையாகுமென்ப. (க௰ங)

கூ: இரசம். க௰: சிற்பத்தொழிற்குறுப்பு.

நல்லசிங்காரம்வீரம்நகைசாந்தங்கருணைகுற்சை
ஒல்லுமற்புதம்பயத்தோடுறுகோபமிரதமொன்பான்
கல்லுலோகம்மண்செங்கல்கண்டசர்க்கரைமெழுகுச்
சொல்லியமரமேதந்தஞ்சுதைவண்ணந்தொழிற்சிற்பர்க்காம். (க௰ச)

க௰: அங்கம், துவர்.

செமேலையாறுநாடூர்நீண்டதார்புரவியானை
கொடிமுரசடனேதானைகூறியதசாங்கமென்ப
படிபுனைகாவலேழப்பழகாற்பான்மரமுத்தக்கா
சோமோவின்றனிர்பத்தென்பவோதியதுவரின்பேரே. (க௰ரு)

க௰: அரியவதாரம்.

நாமமீனாமைபன்றிநாரசிங்கத்திறனே
வாமனன்பரசுராமன்வானரர்தொழுமிராமன்
பாமலிவாசுதேவன்பலதேவனுடனேகற்கி
ஆமிவைபத்துந்தானேயரியவதாரமென்ப. (க௰சா)

க௰: வேளாளர்தொழில்.

வருவிருந்தோம்பலானைவழிசிற்றலொழுக்கமூக்கம்
கரிலகத்தின்மையென்றுங்கைக்கடனாற்றலன்றே
உரியதாமிறைமிறுத்தலொற்றுமைகோடல்போற்றல்
விரவுமாண்வினைதொடங்கல்வேளாளர்செய்கைபத்தே. (க௰எ)

க௰: பெண்களான் மலருமரம்.

ஏடவிழ்மகிழ்சுவைக்கவெழிற்பாலைகண்புகடப்
பாடலிக்கிக்கத்தேம்படிமுல்லைநகைக்கப்புன்னை
ஆடநீள்குராவணைக்கவசோகுதைத்திடவாசந்தி
பாடமாப்பார்க்க * வார்சண்பகமிழ்படத்தளிர்க்கும். (க௰அ)

* பாடவே மராப்பார்க்க என்றும் பாடம்.

௧௦: மறைந்துகாணுங்கோள்கள்.

பரிதியிக்திரண்டுசேரும்பைநாகக்கோளிரண்டோ
டிருசுடர்வளைந்துசூழும்பரிவேட.நெடுகேவீண்டுப்
பெருமியவிண்மீன்வானிற்பெருந்துமமெதிர்ந்தவில்லுக்
கருதுமிவ்வெல்லாம்பேசிற்கூரந்துறைகோள்களாமே. (௪௦௯)

௧௦: ஆண்பிள்ளைக்கவி.

சாற்றுகாப்புச்செங்கீரைதாலேசப்பாணிமுத்தம்
மோற்றுவாராணையேயம்புலிசிற்றில்சிறுபறைப்பின்
ஏற்றிடுஞ்சிறுதேராமிப்பருவம்பத்தையுமிசைக்கும்
தேற்றுமாண்பிள்ளைப்பாட்டாசிரியஞ்சேர்விருத்தப்பாவே. (௪௧௦)

பெண்பிள்ளைக்கவி.

அரிவையர்க்காகிலீற்றிலறைமூன்றுபருவமாகா
உரியதாங்கழங்கம்மானையூசல்முன்னெழினோடு
வருமூன்றேயாதிமூவேழ்மதிகாமுற்றித்தமாதத்
திருபாலாரையுங்கேட்பித்தலினிதைந்தேழாண்டுதானே. (௪௧௧)

௧௨: உயிர்மெய்வேதனை.

ஆனவுடனசனிசீதமாயுதம்விடமருந்து
புனல்வளிவிடத்தையுந்தான்புசிப்பிக்கும்பசியேதாகம்
நனிமிகுமுனிவரூமைநாட்டியபிணியினோடே
இனையும்வேதனையீராறுமெய்திடுந்துன்பமென்ப. (௪௧௨)

௧௨: தானைவகை.

தந்தியொன்றேதேரொன்றுசாதியாம்புரவிமூன்று
வந்திடும்பதாதியைந்தும்வகுத்திடும்பத்தியென்ப
உந்துமப்பத்திமூன்றேயுறிற்சேனாமுகமென்றாகும்
மூந்துசேனாமுகந்தான்மும்மடிகுன்மமாமே. (௪௧௩)

இதுவுமது.

மருவியகுன்மமூன்றுமடிதானேகணமதாகும்
கருதியகணமேமூன்றுகாட்டியவாகினிப்பேர்
பெருகுவாகினிதான்மூன்றுபிரதனையாகுமென்ப
வருபிரதனைதான்மூன்றுவகுத்திடுஞ்சமூவாகும்மே. (௪௧௪)

இதுவுமது.

பேரியல்சமூவேமூன்றுபிரளயம்பிரளயந்தான்
ஓர்மூன்றேசமுத்திரமாகுமுயர்சமுத்திரமோர்மூன்று
தேர்தருசங்குசங்குமூன்றதேயனிகமென்ப
சோர்விலாவனிகமூன்றேசொல்லுமக்குரோணியாமே. (௪௧௫)

௧அ: கணம்.

விரவியவமரர்சித்தர்விஞ்சையர்பசாசர்பூதர்
கருடர்கின்னரரியக்கர்காந்தர்வரசுரர்தைத்யர்
உரகராகாசவாசரந்தரர்குருவோர்யோகர்
கிருதர்கிம்புருடர்விண்ணினிறைகணமூவாறுமே. (௧௧௬)

௧அ: மங்கலச்சொல்.

சீர்மணிபரிதியானைதிருநிலமுலகுதிங்கள்
பார்மலைசொல்லெழுத்துக்கங்கைகீர்கடல்பூத்தேர்பொன்
ஏருறுமிவைமூவாறுயிற்பரியாயப்பேரும்
ஆருமங்கலச்சொற்செய்யுளாய்த்துமுன்வைக்கனன்றும். (௧௧எ)

௧அ: குற்றம்.

பசியதிசயமேயுள்ளல்பயமேகையறவுமூப்புக்
கசிவுநீர்வேட்டல்வேண்டல்கதமதங்கேதத்தோடே
ஒசியுநோய்பிறப்பிறப்போடுவகையேயுறக்கமின்பம்
இசையுமீரொன்பான்குற்றமிவைநீக்கோனிறைவனாமே. (௧௧அ)

௧அ: புராணம்.

மச்சமேகூர்மஞ்சைவம்வைணவம்வராகம்லிங்கம்
பத்மம்வாமனமேகாந்தம்பவிடியமாக்கினேயம்
கற்புளபிரமகைவர்த்தம்மேநாரதமார்க்கண்டம்
உற்றபாகவதமேகாருடம்பிரமாண்டத்தொன்றால். (௧௧௯)

உ௧: இராச சின்னம்.

முடிகுடைகவரிதோட்டிமுரசுசக்கரமேநால்வாய்
கொடிமதில்தோரணங்கீர்க்குடமலர்மாலைசங்கு
கடலொடுமகரமாமைகயலிணையரிமாத்தீபம்
இடபமாசனமூவேழுமிறைதிருப்பொறிகளாமே. (௧௨0)

உ௫: பேடியதிலக்கணம்.

இச்சையாற்பேடிசெய்யுமிலக்கணமிப்பாற்கேண்மின்
நச்சவேபேசலோடுகல்லிசையோர்ந்துநிற்றல்
அச்சமொன்றில்லாதாகியாண்பெண்ணுமடையியற்றல்
உச்சியிற்கையைவைத்தவொருகரத்தானேவீசல். (௧௨௧)

இதுவுமது.

விழிகளைவேறுப்செய்தல்வெம்முலைகவித்துநிற்றல்
கழலவேநோக்கனக்குகாணரேருந்தோமென்றுரைத்தல்
கழிகடம்பயிற்றல்வேறுகாரணமில்லாக்கோபம்
அழுதிடனகேசெவ்வியாய்த்தொருபக்கம்பார்த்தல். (௧௨உ)

இதுவுமது.

இரங்குதல்வருந்தல்யாருமிரங்கவேபேசிக்காட்டல்
குரங்கல்கோதாடல்கூடல்கூவிளிகொண்டுநிற்றல்
மருங்கினிற்கையைவைத்தல்வாங்குதல்பாங்கிதன்னைத்
திருந்தவேநோக்கலெல்லேலென்றலுஞ்செய்கையாமே. (௪௨௩)

உ௮: செய்யுளலங்காரம்.

உருவகமுவமையோடேயுன்றியவடிமடக்கே
விரிசுடர்நிலைமடக்கேவேற்றுமைவெளிப்படுத்தல்
மருவியநோக்கேயுட்கேவருந்தொகைமொழியேமற்றைத்
தருமிகைமொழியேவாழ்த்துத்தன்மம்வேறருத்தம்வைப்பே. (௪௨௪)

இதுவுமது.

சிறப்பதாநிலைசிலேடைமறைத்திடுநிலையில்வார்த்தை
நிறுத்திடனிலையிற்கூட்டமுவமானுபகத்திறேடு
வெறுப்பிலாமகிழ்ச்சிசெய்துமிகுநவலாநவற்சி
உறுத்திடயேயிடுந்தலைக்கிட்டியேர்மொழிதெரிசனங்கள். (௪௨௫)

இதுவுமது.

உரைகெழுபாராட்டோடேயோங்கியநிலையேயையம்
விரவியநிலைவாழ்த்தென்னவிதித்திடுமிருபத்தெட்டு
மருவியவலங்காரத்தைவரிசையிற்பாடவல்லோன்
புரிவுறுமெழுத்துஞ்சொல்லும்பொருள்யாப்போடிவையறிந்தோன்.

தமிழாசிரியனாவான்.

இந்தநல்விலக்கணத்திலிசைக்கிடுதுறையும்வல்லோன்
நந்தமுத்தமிழிறேடுநாற்கவிபயிலவல்லோன்
வந்துநற்குலத்துதித்தோன்வடிவமோடொழுக்கமுள்ளோன்
அந்தவாறையாண்டேகியாண்டெழுபானீங்காதோன். (௪௨௭)

ஒருவர்செய்யுட்கோடன்மரபு.

வழுக்கடர்கவிதைதன்னைவசையிலார்கொள்ளுங்காலைக்
கொழிப்பிறேரணங்களுட்டிக்கொடிமாடமெடுத்துயர்த்தி
விழுத்தருகோலுஞ்செய்துமென்றுகில்விரித்தபின்றைத்
தெழித்திடும்பல்லியந்தான்முழங்கெனத்திமிதிமென்ன. (௪௨௮)

இதுவுமது.

அட்டமங்கலங்களேந்தவரிவையர்பலரும்வாழ்த்த
மட்டவிழ்பானேவேய்ந்தமணிக்குடந்தீபமல்கப்
பட்டபல்லுணுமுனைத்தபாலிகைவிதானப்பந்தர்
இட்டமாமனைவித்தான்றேரியல்புளரிரீயழிலினை. (௪௨௯)

### இதுவுமது.

மன்னுமாசனத்திருந்துவளமலிகவிதைகேட்டுப்
பொன்னொடுந்திருந்துசம்பூண்முடிகடகத்தோடும்
இன்னவைபலவுநீக்கிட்டேழடிபுலவன்பின்போய்
நின்மெனநிற்றன்மன்னர்நிலையினைசவழக்கிதாமே. (௧௯௦

### உலோபியர்க்குச் செய்யுட்செய்வகை.

பாட்டுடைத்தலைவன்றானேபரிசிலீயாதக்கால்
மீட்டொருபெரியனூர்பேர்வேறுசொல்லியற்றிச்செய்யில்
ஈட்டுசெல்வங்கள்பொன்றிநீங்கிவன்றிருவுமாய்ந்து
காட்டியவவனுக்காகுகவின்றதால்வழக்கிதாமே. (௧௯௧

### இதுவுமது.

பரிசிலீயாதபாவிபாமாலைசெம்பூச்சூட்டி
வரியரவுறைவன்மீகமோகாளிமுன்றிறன்னில்
உரியசேண்மனைப்புறத்திலொன்னொரிகொளுத்தில்வீயும்
தெரியுமூவாண்டிலென்றேசெப்பினன்முனிவன்றானே. (௧௯௨

### ௯௨: அறம்.

ஆதுலர்சாலையமறுசமயத்தோர்க்குண்டி
ஓதுவார்க்குணவுசேலையுறுமேறவிடல்காதோலை
மாதுபோகம்மகப்பால்மகப்பேறுமகவளர்த்தல்
வேதைநோய்மருந்துகொல்லாவிலைகொடுத்துயிர்நோய்தீர்த்தல். ()

### இதுவுமது.

கண்ணாடிபிறரிற்காத்தல்கன்னிகாதானங்காவே
வண்ணார்நாவிதரேசுண்ணமடந்தடங்கண்மருந்து
தண்ணீர்பெய்பந்தல்கோலத்தலைக்கெண்ணெய்சிறைச்சோறூடு
பண்ணுணவிலங்கூணல்கல்பசுவின்வாயுறைகொடுத்தல். (௧௯௪)

### இதுவுமது.

அறவையாம்பிணமடக்கலறவைத்துரியம்வருந்தா
திறவியேவிடம்விடாமனிறையத்தின்பண்டநல்கல்
உறுதியாவிரிஞ்சன்றதறியினவையோதுமெண்ணான்
கறநிலையிதானங்களம்பிகைசெய்யும்வாறே. (௧௯௫)

### எழுவகைப்பிறப்பில் எண்பத்துநான்குநூறாயிர யோனிபேதம்.

ஊர்வனபதினொன்றாமொன்பான்மானிடர்தம்பேதம்
நீரினில்விலங்குபன்னொப்பப்பத்தாநெடியதேவர்
சாருமீரேழ்நாலைந்தேதாபரயோனிபேதம்
ஆகுமென்பாணன்கோடியமைத்தநூறாயிரங்கள். (௧௯௬)

ஓரறிவுயிர்முதல் ஆறறிவுயிர்வரைக்கும்.

உற்றறிபுலனொன்றாற்புன்மரமேயோரறிவிற்சீவன்
முற்றுமீரறிவிற்சீவன்முரணந்தேயாதிநாவாற்
செற்றமூவறிவிற்சீவன்சிதலெறும்பாதிமூக்காற்
சொற்றநாலறிவிற்சீவன்றும்பிவண்டாதிகண்ணால். (௧௩௭)

இதுவுமது.

மானவர்மணிதார்கீழ்ப்போய்மாழ்கியசுரரோடு
கானுறைவிலங்குபுள்ளுக்காட்டோலறிவினோடே
ஊனுயிர்ச்செவியுமாங்கேயுறவினையறிவிற்சீவன்
மானமர்நோக்கிநல்லாய்மனமுமொன்றதிகமாமே. (௧௩௮)

காப்புக்கு முன்னெடுக்குந் தெய்வம்.

காப்புக்குமுன்னெடுக்குங்கடவுடான்மாலேயாகும்
பூப்புனைமலரின்செல்விபுனைபவனாதலானும்
காப்பவனாதலானுங்கதிர்முடிகடகத்தோடு
வாய்ப்பதாமதாணிபூணூல்வரிசையிற்புனைதலானும். (௧௩௯)

அருகன், சிவன் ஊர்திமுதலியன.

அருகனூர்திதானேயம்புயம்படைநற்காட்சி
பெருகியஞானசீலம்பெருங்கொடியருளேயென்ப
மருமலர்க்கொன்றையார்க்குவாகனமிடபமாகும்
பரசொடுகெடியசூலம்பினாகம்வில்படைகளாமே. (௧௪0)

மால், பிரமன், வேதியர் ஊர்திமுதலியன.

கரியமால்துவசமூர்திகலுழனென்றுரைக்கற்பாற்றே
வரிசிலையாழிசங்குவாள்கதைபடையைந்தாகும்
பிரமனூர்தியன்னம்பெரும்படைபாசமாகும்
அருமறைக்கொடியேயாகுமந்தணர்தமக்குமாமே. (௧௪௧)

பலதேவன், இயமன், குபேரன் ஊர்திமுதலியன.

பரிவுளபலதேவற்குப்படைநாஞ்சில்கொடியேபெண்ணை
எருமையேயமனூர்தியெறிபடைபாசந்தண்டாம்
கரியதோர்கூற்றினுக்குக்கடும்படைக்கணிச்சியாகும்
புரிநரவாகனம்பூம்புட்பகங்குபேரனூர்தி. (௧௪௨)

சூரியன், சந்திரன், சுப்பிரமணியர் ஊர்திமுதலியன.

குறைவிலாத்தனிக்காற்பொற்றேர்கூறியவருக்கனூர்தி
நிறைதருமதியினூர்திநீண்முத்துவிமானமென்ப
அறுமுகனூர்திதானேயானையுமயிலுமென்ப
உறுபடைவேலேமற்றையொண்கொடிகோழியாமே. (௧௪௩)

இந்திராணூர்திமுதலியன.

கரியயிராவதம்பூங்கற்பகக்காவேசோலை
உரியவெம்பரியின்பேரேயுச்சைசிரவமாகும்
மருவுமண்டபஞ்சதன்மைமாளிகைவசந்தமென்ப
பெருமியவுருமுமற்றைப்பெருங்கொடிபுரந்தரற்காம். (௧௪௪)

காளி, துர்க்கை,பூதேவி ஊர்திமுதலியன.

அழகியகாளியூர்தியாளியேதுவசம்பேயாம்
பழுதறுதுர்க்கைபற்றும்படைவாளாகலையேயூர்தி
செழுமுழுபூதேவியூருங்கின்ர்ந்தவாகனந்தினமும்
கழுதையாம்படைதுடைப்பங்காக்கையம்பதாகைதானே. (௧௪௫)

சத்தமாதர்கள் ஊர்தியும், படையும்.

அன்னமேவிடபக்தோகையணிமயில்கலுழன்மியம்
பின்னியல்யானையோடுபேயெழுபேர்கணூர்தி
மன்னுதன்முறைபினகம்வாள்சிலைசத்தியாழி
துன்னியகலப்பைவச்ரஞ்சூலம்வெம்படைகளாமே. (௧௪௬)

மூவரசர்கள் கொடியும் மாலையும், புலவர் கொடியும்.

மன்னியசேரனுக்குவரிசிலைக்கொடியனந்தார்
பொன்னியந்துறைச்சோழற்கேபுலிக்கொடியாத்திமாலை
தென்னவன்றனக்குத்தானேசேற்கொடிவேப்பந்தாராம்
பன்னியகேழல்வேழப்பதாகையும்புலவருக்கே. (௧௪௭)

பட்டத்துயானையிலக்கணம்.

காலொருகாதுகோசங்கைவாலேழிலத்திற்றோய்ந்து
பாலொடுசெங்குபோதும்பதத்துவிர்விதத்திற்சூழ்ந்து
வாலொடுகோன்மெய்கைவெண்மருப்பினுயிரைக்கொன்றே
ஏலவேழுயர்ந்தொன்பானீண்டுரைந்துமுழத்ததாகி. (௧௪௮)

இதுவுமது.

பெறுமுறைமுன்புயர்ந்துபின்பணிந்தழிதாய
தறுகண்ணதாகிச்சூழிசார்ந்தமத்தகத்ததாகி
முறிகர்கன்னதானமூரிமால்யானைதானே
அறநெறிசெலுத்துஞ்செங்கோலரசவாவாகுமென்ப. (௧௪௯

பட்டத்துக்குதிரையிலக்கணம்.

மாதர்தம்மனத்தையொத்தமனத்ததாய்வாழைபூத்த
கோதிலாமடலேபோலக்கொழுந்துணசெவியதாகிப்
பாதமுன்பின்னிருந்திப்பகர்முகப்பான்மைத்தாகி
ஓதுமென்பத்திரண்டங்குவியுயர்பரிமன்னர்க்காம். (௧௫0

### அதியுகம் முதலியன.

நபதினாயிரம்பத்துரையதியுகமென்றாகும்
நமதியுகத்தான்மீளமதித்தனாயிரங்கள்
ரமமாம்பிரமனாயிரமதுகோடிதானே
ரியதோர்கோடிபத்தாமற்புதமென்றுஞ்சொல்லும். (௧௫௧)

### இதுவுமது.

நதருகோடிநூறுகணகமாங்கணகம்பத்துப்
ருநியகற்பமாகும்பேணுமக்கற்பம்பத்துத்
நயிருநிகற்பமாருநிகற்பமீரைந்துசங்கம்
மூளசங்கம்பத்துச்சமுத்திரமென்றேசாற்றும். (௧௫௨)

### பன்னிரண்டாவது விருத்தத்தொகை.

லமாத்தவிப்பல்பேர்க்கூட்டத்தொருபெயர்த்தொகுதிதன்னில்
நத்தமூவைம்பதின்மேன்மிகுதியோரிரண்டுஞ்செய்தான்
நக்கிளர்குணபத்திரன்றாள்சென்னியிற்சூடிக்கொண்டோன்
நக்கிளர்பொழில்சூழ்வீரைமன்னன்மண்டலவன்றானே.

பன்னிரண்டாவது
பல்பெயாக்கூட்டத்தொருபெயர்த்தொகுதி முற்றிற்று.

---

